







Promise
TOOTH POWDER
with
time-tested
Clove Oil

இளவரசர் சார்ல்ஸ், லேடி டயானா ஸ்பென்ஸரை மணந்து கொள்வார் என்பது அதிகாரபூர்வமாக அறிவிக்கப்பட்டுவிட்டது.

இந்த அறிவிப்பைத்தான் உலகம் எதிர் பார்த்துக் காத்திருந்ததே தவிர, இவர்களது காதல் ரொம்பக் காலமாகவே பத்திரிகைகளில் 'அடி'பட்டு வந்த விஷயம்தான்.

'அடி' பலமாகவே விழுந்த தருணங்களும் உண்டு. ''சார்ல்ஸும் டயானாவும் அரச குடும்பத்தின் பிரத்தியேக ரயிலில் ஓர் இரவைத் தனிமையில் கழித்தார்கள்'' என்று ஒரு பத்திரிகை விஷமத்தனமாக எழுதியது.

இன்னொரு சமயம், டயானாவின் கால்கள் மெல்லிய கவுனின் ஊடே முழுமையாகத் தெரிவது போல் புகைப்படம் எடுத்துப் பிரசுரித்தன பத்திரிகைகள்.

இத்தகைய வேதனைகளை மிகுந்த பொறுமை காட்டிச் சகித்துக் கொண்டாள் டயானா. இந்தக் கண்ணியமே அவள் எதிர்கால பிரிட்டிஷ் அரசியாக விளங்கவும் தகுதி உடையவள் என்பதைப் பலருக்கும் உணர்த்தியது.

திருமணம் பற்றிய அறிவிப்பு வந்ததிலிருந்து, ராஜ மரியாதை காட்டுவதில் என்றுமே முன்னிற்கும் பிரிட்டிஷ் மக்கள் மெய்சிலிர்த்துப் போயிருக்கின்றனர். ரொம்பச் சமர்த்தான, தங்களுடைய கண்மணியான இளவரசனுக்குக் கல்யாணம் என்று பூரித்துப் போயுள்ளனர். டயானாவின் அழகை வாய்க்கு வாய் வர்ணித்துக் கொண்டிருக்கின்றனர்.

இருமுறை விவாகரத்து செய்திருந்த அமெரிக்கப் பெண்மணியைக் காதலித்து, மணந்து கொள்வதற்காக எட்டாவது எட்வர்ட் 1936ல் சிம்மாசனத்தைத் துறந்ததிலிருந்தே பிரிட்டிஷ் அரச பரம்பரை திருமண விஷயத்தில் ரொம்ப ''நர்வஸ்''ஸாகத்தான் இருந்து வருகிறது. சார்ல்ஸுக்கு ஏற்ற மனைவி அமைய வேண்டுமே என்று அரச குடும்பம் பட்ட கவலை கொஞ்ச நஞ்சமல்ல. சார்ல்ஸ் எந்தப் பெண்ணைச் சந்தித்துப் பேசினாலும் அதில் காதலைக் கண்டன பிரிட்டிஷ் பத்திரிகைகள். உடனே அந்தப் பெண்மணியின் பூர்வீகங்களை ஆராய ஆரம்பித்தது அரச குடும்பம்!

ரொம்ப ரொம்ப நுணுகிப் பார்த்து எல்லாரையும் கழித்துக் கட்டிக் கொண்டிருந்தால் கடைசியில் தம் மகனுக்குத் திருமணமே ஆகாதோ என்றுகூட ஒரு கட்டத்தில் பிலிப் கோமகனுக்குக் கவலையாகப் போய்விட்டது! சார்ல்ஸுக்கு வயது 32 ஆகிறதே!

அனைத்திலும் முக்கியமான கவலை சார்ல்ஸ் மணக்கப் போகும் பெண்மணி கற்பைக்



காத்துக் கொண்டவளாக இருக்க வேண்டுமே என்பதுதான்! எதிர்கால பிரிட்டிஷ் ராணியாக விளங்கப் போகிறவளாயிற்றே!

மேல் நாடுகளில் இப்போதெல்லாம் கன்னித் தன்மையைக் காத்துக் கொண்ட பெண்களைக் கண்டுபிடிப்பதே அபூர்வம்! ''உன்னுடன் படுத்துக்கொள்ள மாட்டேன் என்று பாய் ஃபிரண்டிடம் சொல்லும் தைரியத்தை வளர்த்துக் கொள்ளுங்கள்'' என்று பிரிட்டனில் பொதுநல ஸ்தாபனங்கள் உயர்நிலைப் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் மாணவிகளுக்குத் துண்டுப் பிரசுரங்கள் வழங்குகின்றன. இந்த நிலையில் அரச குடும்பம் கவலைப்பட்டதில் வியப்பென்ன?

டயானு ஸ்பென்ஸரின் குடும்பப் பாரம்பரியம் மட்டுமின்றி அவளுடைய தனிப்பட்ட வாழ்க்கையும் நுணுகி ஆராயப்பட்டன. ஆய்வுகளின் முடிவு: பூரண திருப்தி!

உயர்தர, பெருமை மிக்க குடும்பத்தில் பிறந்தவர் டயானு சீமாட்டி. தாத்தா, கொள்ளுத் தாத்தா என்று சரிதத்தை ஆராய்ந்தால் ராஜ ரத்தமே ஓடுகிறது! பாதுகாப்பான வாழ்க்கை நடத்தியவள். வயது 19.

கிசுகிசு நிபுணர்கள் சார்ல்ஸுக்கும் எத்தனையோ பல பெண்களுக்கும் காதல் முடிச்சுப் போட்டிருக்கிறார்கள்—கடந்த காலத்தில். அந்தப் பெண்களில் ஒருத்தி ஸாரா. டயானுவின் தமக்கை. ஸாராதான் டயானுவை சார்ல்ஸுக்கு அறிமுகமே செய்து வைத்தவள்.

டயானு நேற்றுவரை ஒரு நர்ஸரிப் பள்ளியில் ஆசிரியை.

சார்ல்ஸுக்குக் கெட்ட பழக்கம் ஏதும் கிடையாது. சிகரெட் கூடப் பிடிப்பதில்லை. ஏதேனும் ஒரு பலவீனத்தைக் குறிப்பிட வேண்டுமென்றால் 'டீவி பிரியர்' என்று சொல்லலாம். சில சமயம் பிடித்தமான நிகழ்ச்சியைப் பார்க்க முடியாமல் அரசக் கடமைகள் அழைக்குமானால் அவர் உதவியாளர் அந்த நிகழ்ச்சியை வீடியோ டேப்பில் பதிவு செய்து வைத்து விடுவார்.

சார்ல்ஸுக்கு உள்ள 'பெருமை'களில் ஒன்று: 'உலகிலேயே மிகவும் மோசமாக உடை அணிந்த பத்துப் பேரில் ஒருவர்' என்று தையல்காரர்கள் சங்கம் அளித்த பட்டம்.

சார்ல்ஸின் ஏக்கம்: ''இளவரசன் என்ற முறையில் நான் அடிக்கடி தனிமையைச் சந்திக்க வேண்டியிருக்கிறது. அறிவிலும் பண்பிலும் உயர்ந்தவர்கள் மரியாதை காட்டி ஒதுங்கி விடுகிறார்கள். அவர்களிடம் நெருங்கிப் பழகுவதால் அடையக் கூடிய பயனை நான் இழக்கிறேன்.''

முன்னாள் இளவரசர்கள் யானை ஏற்றம், குதிரை ஏற்றம் என்று பழகியது போல, சார்ல்ஸ் கல்லூரிப் படிப்போடு கூட முப்படைகளிலும் தீவிரப் பயிற்சி பெற்றுள்ளார். ஹெலிகாப்டர்கள், ஜெட் விமானங்கள், டாங்குகள், சப்மரீன்கள் — சகலத்தையும் இயக்கத் தெரிந்தவர்.

திருமணம் ஜூலையில் நடக்கலாம் என்று எதிர்பார்த்து பிரிட்டன் இப்போது முதலே திமிலோகப்படுகிறது. அனைவரிலும் மிகவும் குஷியாக இருப்பவர்: பிரதமர் மார்கரெட் தாட்சர்.

வேலையில்லாத் திண்டாட்டம், பொருளாதாரச்சீர்குலைவு, விலைவாசி ஏற்றம் எல்லாவற்றையும் சில காலம் மக்கள் மறந்துவிடுவார்கள் அல்லவா?

தொகுப்பு: குட்டிகிருஷ்ணன்
படம் நன்றி: நியூஸ் வீக்





# கிராமப் புறத்துக்கு ஒரு மருந்துச்சீட்டு



**பு**ற்று நோய் தொடர்ந்து மக்களைக் கொல்கிறது. குஷ்டம், மில்லியன் கணக்கில் மக்களின் உடலைத் தின்று வருகிறது. காச நோய் வருத்துகிறது. இதற்கெல்லாம் முதல் முக்கிய காரணம் மக்களின் அறியாமை. ஆரம்பத்திலேயே கண்டுபிடித்து வைத்தியம் செய்து கொண்டால் குணமடையலாம். ஆனால் நோய்க்கான அறிகுறிகள் என்ன என்பதே மக்களுக்குத் தெரியாது. இரண்டாவது முக்கிய காரணம் கிராமப் பகுதிகளில் வைத்திய வசதி இல்லாதது. அவர்கள் இதற்காகப் பெரிய நகரங்களுக்கு வரவேண்டும். அநேக கிராமவாசிகளுக்கு இத்தகைய பயணத்தை ஏற்பது கடினம். பண வசதி இல்லை. பணம் இருப்பினும், அவர்களுடைய தொழில் பல நாட்கள் வெளியூரில் தங்க அனுமதிப்பதில்லை. இந்நிலையில் முறையான வைத்தியம் இல்லாததால் அநேக மக்கள் பயங்கர வியாதிகளுக்குப் பலியாகிறார்கள்.

இந்த அச்சத்துக்குரிய சூழ்நிலையைத் தகர்த்து, மேற்கு கோதாவரி, கிழக்கு கோதாவரி, கிருஷ்ணா, குண்டூர் பகுதிகளில் உள்ள சுமார் ஒரு கோடியே பத்து லட்சம் விவசாயிகளுக்கு ஆரோக்கிய வாழ்வு தரவேண்டும் என உறுதியாக நின்றது, முல்லபுடி வெங்கட்ட நாயுடு மெமோரியல் மெடிகல் டிரஸ்ட். இதைத் தொடங்கியவர்கள் ஆந்திரா சுகர்ஸ் லிமிடெட்டின் உயர் மட்ட நிர்வாகிகள் திம்மராஜு, ஹரிசந்திர பிரசாத், ரங்கராவ் முதலியோர். இத்தகைய அமைப்புக்குக் காரணமாக இருந்தவர் டாக்டர் டி. ஜெகந்நாத ரெட்டி. ஆலோசகர் குழுவில் முக்கியத்துவம் பெற்றிருந்தார்.

அறக் கட்டளை இரண்டு கோடி ரூபாய் திட்டத்தை வகுத்தது. ஒரு டன் சர்க்கரை விற்றால் இந்த இயக்கத்துக்கு ஒரு ரூபாய் என சர்க்கரை ஆலை நிர்வாகிகள் கொடுத்து வந்தனர். மன உறுதியோடு ஒரு காரியத்தை, நல்ல எண்ணத்தில் துவக்கினால் அது வெற்றி பெறாமல் போகுமா? உலக ஆரோக்கிய கழகம்; உலக வங்கி, ஐ. நா. சபையின் குடும்பக் கட்டுப்பாடு திட்ட இயக்கம் போன்ற நிறுவனங்கள் முன்வந்து பெருமளவு உதவின.

மேற்கு கோதாவரி மாவட்டத்தில் தணுக்கு என்ற இடம் இதற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டது. 450 படுக்கைகள் கொண்ட மருத்துவ மனையாக அமைத்தனர். இதில் புற்று நோய், இதய நோய், மற்றும் பல தொத்து நோய்களை உடனடியாகக்கண்டு பிடித்து வைத்தியம் செய்ய நவீன வசதிகள் உண்டு.

ஆண்களுக்கு மரியாதை காட்டும் வகையில் ஆந்திராவில் பெண்கள், சுருட்டின் நெருப்புப்பகுதியை வாய்க்குள் வைத்துப் புகைக்கின்றனர். அதனால் வாய் புற்றுநோய் அவர்களிடையே அதிகம் எனக் கண்டு பிடித்து விளக்கியவர் இவர். மேலும் சுகாதார உணர்வோ, அதன் அவசியமோ அறியாததால் பெரும்பான்மையான மக்கள் கொடூர – வியாதிகளுக்குப் பலியாகின்றார்கள் என்கிறார். ஓரளவு வயதுக்குப் பிறகு மூட்டுக்களில் வரும் வலிக்கு முக்கிய காரணம் நெய், எண்ணெய், முட்டையின் மஞ்சள் கரு இவைகளை அதிகம் உணவில் சேர்ப்பதேயாகும். இவை ரத்தத்தில் கொலெஸ்டரால் என்ற கொழுப்புச் சத்தை அதிகப்படுத்து கின்றன. சுத்த நல்லெண்ணெயில் உணவு தயாரித்தால் பல தேக ஆரோக்கியப் பிரச்னைகள் எழவே செய்யாது.

விசாகப்பட்டினம், குண்டூர், மருத்துவக் கல்லூரிகளில் பணியாற்றிய டாக்டர் ஜெகந்நாத ரெட்டி பாண்டிச்சேரி ஜிப்மர் கல்லூரியிலும் பல சாதனைகளைப் புரிந்தார். திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வரா சர்வகலாசாலையில் துணை வேந்தராகப் பணியாற்றியபோது, பாடத் திட்டத்தில் பதினாறு புதுப் பிரிவுகளை ஆரம்பித்தார். ஜனத்தொகைப் பெருக்கத்தை ஆராய்ச்சி செய்யவும் வழிவகுத்தார்.

தணுக்குவில் ஆரம்பிக்கப்பட்ட மருத்துவ மனை நோய்களைக் குணப்படுத்துவதுடன் ஆராய்ச்சிகளுக்கும் உதவியது. குடும்பக் கட்டுப்பாடு திட்டம்; பல வியாதிகளுக்குக் காரணமாகும் கொசு ஒழிப்பு போன்றவைகளையும் மேற்கொண்டது. சுற்றுப்புற சுகாதாரத்தைப் பற்றியும் மக்களுக்கு எடுத்துக் கூறியது. வேலைக்குப் பெற்றோர் செல்லும் போது குழந்தைகளைப் பாதுகாத்துக்கொள்ளும் காப்பகம் கூட அமைத்துள்ளனர்.

கிராமப்புற மக்கள் வைத்தியத்துக்காகப் பட்டணம் வருவதில் அவர்களுக்கு உள்ள பல சங்கடங்களை நன்குணர்ந்து கொண்ட இவர் அதற்கு, நடமாடும் மருத்துவ மனைகள் நிறைய வேண்டும் என்கிறார்.

தற்பொழுது சென்னை கோடம்பாக்கம் விஜயா மருத்துவ மனையில் இயக்குனராகப் பணியாற்றும் டாக்டர் ஜெகந்நாத ரெட்டி அதனைப் பலவிதங்களிலும் உயர்த்திப் பிரசித்தி பெற்றதாகச் செய்துள்ளார். **– குயிலி**




● மனத்தில் தோன்றுவதை எழுதிவிட்டு இது தான் கதை என்று கூறும் எழுத்தாளர்களிடையே ஆழ்ந்து சிந்தித்து ஓர் அற்புதமான இலக்கியம் படைத்த இந்திரா பார்த்தசாரதிக்கு நன்றி!
சென்னை-49 — ஏ. எஸ். பாலகுமார்

● தொடருக்கு உயிரூட்டின 'ஜெ'யின் சித்திரங்கள்.
ஸ்ரீரங்கம் — ஆர். ஸ்ரீனிவாசன்

● உயிரோட்டமுள்ள கதையும், உயிர்த் துடிப்புள்ள பாத்திரங்களும் ப்ளஸ் பாய்ண்ட்டுகள். 'வளவள' என்று சொல்லிக் கதையை இழுத்தடிக்காமல் 18 அத்தியாயங்களில் கவர்ச்சிகரமாக முடித்ததுடன் வாசகர்களின் நெஞ்சை விட்டு அகலாதவாறு கதையைச் சொல்லியதற்காகப் பாராட்டு.
சென்னை-44 — ஏ. கே. சங்கர்

● வாழ்க்கையின் தத்துவங்களைச் சொல்லும் இ. பா.வின் திறன் மிக்க படைப்புகளை வெளியிடும் துணிவு கொண்ட ஒரே கமர்ஷியல் மேகஸின் 'கல்கி'தான்.
கல்லக்குறிச்சி — ஆர். ராமானுஜன்

● ஊனமுற்றோர் நலன் ஆண்டில் தாமோதரனுக்கு ஏற்பட்ட முடிவைப் பார்க்கும் போது நம்மை அறியாமலேயே நம் கண்களிலிருந்து இரண்டு சொட்டுக் கண்ணீர் கீழே விழுகிறது.
தஞ்சை — கே. ஆர். மனோஹர்

● ''ஏறி முடித்த பின் எண்ணிப் பார்த்தால் ஏணிக்கு மேலே எதுவுமே இல்லைதான்'' —சிந்தனைத் துளிகளை அள்ளித் தெளித்து உணர்ச்சிப் போராட்டங்களை அறிவுபூர்வமாக அணுகியிருக்கும் இந்த நாவல் பேராசிரியரின் பேனாவுக்கு மற்றும் ஒரு வெற்றி.
திருச்சி — வி. விசுவநாதன்

● உயிரில்லாத பாத்திரங்கள், இலட்சியமில்லாத கதைப் போக்கு, தூக்கத்தையே வரவழைக்கும் உரைநடை... மொத்தத்தில் 18 வாரமும் பேனா என்னும் ரம்பத்தால் எங்களை அறு அறு என்று அறுத்துவிட்டார் இந்திரா பார்த்தசாரதி... கல்கி வாசகர்கள் மிகவும் பொறுமைசாலிகள் என்பது மீண்டும் ஒருமுறை நிரூபணமாகியுள்ளது.
கோவை — ஆசிர் எம். அல்போன்ஸ்

● ''மை காட்...! நானும் ''விம்மி'' செய்யும் வேலையைப் போலத்தான் செய்து கொண்டு இருக்கிறேன். வரி வரியாகப் படித்து, மூடி, மறுபடியும் திறந்து, படித்து, மூடி, திறந்து... படித்து... படித்து....!''
காரணம்? முடிவு புரியவில்லை!
கோவை — ஹாலீத் நசீர்

● பொருந்தா மனங்களின் போராட்ட உணர்வுகளை நன்கு விளக்கியுள்ளார். மனித மனங்களில் எழும் மிகச் சாதாரண, வெளிப்படுத்த இயலாத எண்ணங்களை, உணர்வுகளை மிகத் துல்லியமாகப் படம் பிடித்துக் காட்டியிருக்கிறார்.
சென்னை-56 — பூவை விமலன்

● முறை பிசகிய சிநேகிதங்கள் 'பாயிண்ட்' மாறிய தண்டவாளங்கள் போல. முடிவில் விபத்தாய்த்தான் முடியும் என்பதைக் கதை நிரூபிக்கிறது.
சென்னை-11 — மணிமகன்

● மனிதர்களை, விஷயங்களை அவர் பார்க்கும் வித்தியாசமான பார்வையும் (உ-ம் புத்தருக்கு அரண்மனை வாழ்க்கை போரடித்ததால்தான் துறவு மேற்கொண்டார்) கதைப் போக்கினூடே அவர் தரும் பிற நாட்டு மொழி இலக்கிய மேற்கோள்களும் எவரையும் கவரும் தன்மை வாய்ந்தவை. பாரதியாரின் கவிதை வரிக்கு விறுவிறுப்பான கதை வடிவம் தந்த நயம் பாராட்டத் தக்கது.
குல்லூர்ச்சந்தை — இரா. பால் பாண்டியன்

● நடைமுறைக் கதைகளிலிருந்து முற்றிலும் மாறுபட்ட ஒரு கோணத்திலிருந்து உயர்மட்ட வாழ்க்கையில் ஏற்படும் சிதைவுகளை நன்றாக விளக்கி யிருக்கிறார்.
வீரபாண்டி — வதிலை அன்புச் செல்வன்

● அறிவுபூர்வமாக அமைந்த ஒரு நவீனம்.
முத்தரசநல்லூர் — கே. எஸ். சுந்தரவல்லி

● வெந்து தணிந்த காடுகள் நவீனம் ஆரம்பம் முதலே மனோதத்துவ ரீதியில் தத்துவங்களை வாரி இறைத்தபடி வாசகர்மனங்களில் பவனி வந்தது. இந்த நவீனத்தைப் படித்தாவது இன்றைய சமுதாயத்தில் உள்ள எத்தனையோ அருண்களும், விம்மிகளும் ராதிகாக்களும் தங்கள் வாழ்க்கையைப் பாழாக்கிக் கொள்ளாமல் செம்மைப்படுத்திக் கொள்ளட்டும். ஆசிரியர் விம்மியின் முடிவை நாசூக்காகச் சொல்லி இருக்கிறார். தாமோதரனின் முடிவு மனத்தை உருக்கியது. பொருத்தமான தலைப்பு. ஏற்கும்படியான முடிவு.
திருச்சி-8 — எம். குருநாதன்



# குழந்தைக்கு மிகவும் சிறந்தது தாய்ப்பால்.

**முலைப்பால் குழந்தைக்கு மிகவும் சிறந்தது-ஏன்?**

தூய்மையானது, கிருமிகளற்றது, குழந்தையின் ஜீரண முறைக்கு நூற்றுக்கு நூறு உகந்தது—தாய்ப் பால். பலவித நோய்களையும் எதிர்க்கும் சக்தியை அளிக்கிறது தாய்ப்பால். குழந்தைக்கு அன்பான உணர்வும் பாதுகாப்பும் கிடைக்க உதவுகிறது. தாய்ப்பால் குடிக்கும் குழந்தைக்கு வாய்வு நோய்கள், சரும நோய்கள் ஏற்படுவது மிகவும் அரிது.

**3 மாதம் ஆனபின், பால் மட்டும் போதாது**

வளர்ச்சிக்குத் தேவையான போஷாக்குகளுக்கு ஏற்ப குழந்தையின் உணவை மாற்றியமைத்தல் வேண்டும். இரும்புச்சத்து அதிகமான, போஷாக்குள்ள, மென்மையான திட உணவை டாக்டர்கள் சிபாரிசு செய்கிறார்கள்.

**டாக்டர்கள் ஃபாரெக்ஸ் சிபாரிசு செய்யக் காரணம்?**

குழந்தைக்கு திட உணவைத் துவங்குவதற்கு தனிப்படத் தயாரிக்கப்பட்டது ஃபாரெக்ஸ்—இதில் புரதம், கார்போஹைட்ரேட், கொழுப்பு, கால்ஷியம், பாஸ்பரஸ், மற்றும் வைட்டமின்கள் உள்ளன. இரும்புச் சத்தும் அதிகமுள்ளது—ஃபாரெக்ஸ். ஆகவே, குழந்தையின் விரைந்த முழு வளர்ச்சிக்கு உன்னதமான திட உணவாகிறது, ஃபாரெக்ஸ்.




**இலவசம்!** குழந்தையின் முதலாண்டுப் புத்தகத்திற்கு, 50 பைசா தபால் தலையுடன் எழுதுங்கள்.
த.பெ. எண் 19119,
(FAR 202B),
பம்பாய் 400 025.

## டாக்டர்கள் சிபாரிசு செய்வது ஃபாரெக்ஸ்
## குழந்தையின் விரைந்த முழுவளர்ச்சிக்கு உன்னதமான திட உணவு

CASGLF-11-203 TAM

# பார்த்தோம் —





பல்லவன் பின்புறப் பெண்கள் வரிசை. கையிலிருந்த 'கல்கி'யைப் பிரித்த ஒரு பெண் உடனே அதை அடுத்தவளிடம் நீட்ட அதை அந்த வரிசைப் பெண்கள் அனைவரும் பகிர்ந்து கொண்டனர். எந்தப் பக்கத்தை அவ்வளவு ஆர்வமாகப் பார்க்கிறார்கள் என்று அறியும் ஆவலைத் தீர்த்து வைக்கும் விதமாக ஒரு பெண் சொன்னாள்: " 'சுவர்ணமுகி' என்ற தலைப்பே எவ்வளவு அழகா இருக்கில்லே! 'திருவரங்கன் உலா' தான் அவரோட பெஸ்ட். 'சுவர்ணமுகி' எழுதறச்சே ஸ்ரீவேணுகோபாலன் அதை பீட் பண்ணுவாரா பார்க்கணும்!"



● தாஸப் பிரகாஷ் அருகிலுள்ள ஒரு ரேடியோ விற்பனை நிலையத்தில் — "பழைய ரேடியோக்களைப் பெற்றுக் கொண்டு புதிய ரேடியோக்கள் தரப்படும்" என்று விளம்பரப்படுத்தியிருக்கிறார்கள்.

● 'மொபைல் போஸ்ட் ஆபீஸ்' என்பதை "இயங்கும் அஞ்சலகம்" எனக் குறிப்பிட்டிருக்கிறார்கள். மற்றவை இயங்காத அஞ்சலகங்களா?

● மியூசியத்துக்குப் பின்னால் உள்ள அடர்ந்த மரங்கள், புல்வெளிகள் அண்மைக் காலமாகப் பகல்நேரக் காதலர் பூங்காவாக மாறியுள்ளது.




● கடந்த மாதம் 'ரீடர்ஸ் டைஜஸ்ட்' மிக காலதாமதமாக வெளி வந்தது. காரணம்? அச்சகத்தில் வேலைநிறுத்தமாம்.

● பூக்கடை போலீஸ் ஸ்டேஷன் அருகேயுள்ள "பஞ்சாப் நேஷனல் பேங்க்" கிளையின் அறிவிப்புப் பலகையில் 'நிறுவனம்' என்ற சொல் 'நிருவனம்' எனத் தவறுதலாக எழுதப்பட்டுள்ளது.

● சென்ட்ரல் ஸ்டேஷன். இரண்டு ரயில் பெட்டிகளில் 'TATA' எனப் பெரிய துணிகளில் எழுதப்பட்டுத் தொங்கிக் கொண்டிருந்தது. 'Traffic Accounts Tourist Association' என்பதன் சுருக்கமாம் TATA

● "24 மணி நேர மருத்துவ மனைகள்" என்ற பெயரில் தனியார் மருத்துவ மனைகள் பல இடங்களில் தோன்றியிருக்கின்றன. —வெம்ஜி

● சென்ட்ரல் அருகே ஒரு சுவையான காட்சி. ஃபுட்போர்ட் பயணிகளை போலீஸ் 'புக்' செய்து விசாரணைக்கு அழைத்துச் சென்றனர். எதில் தெரியுமா? ஒரு திறந்த பிரைவேட் லாரியில்! பெண்களையும் சேர்த்து சுமார் ஐம்பது பேர்கள் இருக்கலாம். பஸ்ஸில் ஃபுட் போர்ட் பிரயாணம் குற்றமென்றால், திறந்த லாரியில் பயணிகள் பிரயாணமும் குற்றம்தானே?

— நாயகன்




# சொல்கிறோம்!



# தீவிரவாதி தீபா!

● யாரும் தீபாவை ஒரு மாதத்துக்குத் தொந்தரவு செய்யக் கூடாது. மிகவும் சீரியஸாகப் படித்துக் கொண்டிருக்கிறார். எஸ். எஸ். எல். சி. பிரைவேட்டாகப் படித்தார் என்று எல்லோருக்கும் தெரியும். அது பாஸ் செய்ததன் விளைவு பி.யூ.சி. போகும் ஆசை ஏற்பட்டு, வரும் ஏப்ரல்மாதம் தேர்வு எழுதப்போகிறார். யார் தெரியுமா டியூஷன்? அவரது தாயார்தான். அவரே ஒரு ஆசிரியைதான்.

● ரொம்ப பிஸியா என்று தெரியாத்தனமாகக்கூட சாருஹாசனைக் கேட்டுவிடக் கூடாது. உண்மையிலேயே அவர் பிஸிதான். படத்தில் நடிப்பதால் அல்ல; படப் பிடிப்பை நடத்துவதால். பல வி.ஐ.பி.க்கள் இப்படத்தில் நடிக்கிறார்கள். எல்.வி.பிரசாத், திருமதி ஒய்.ஜி.பி., கமலஹாசனின் சகோதரி நளினியின் மகள் — இப்படிப் பட்டியல் வளர்ந்து கொண்டே போகிறது.

''ஏப்ரல் 10ந் தேதிக்குப் பிறகு ஒரு மாதம் நான் சென்னையில் இருப்பதாகவே இல்லை. எங்காவது வெளி நாடு போய் ஓய்வு எடுக்கலாமென்று பார்க்கிறேன்'' என்கிறார் சாருஹாசன்.

கமல், ''ராஜ பார்வை'' படத்தின் டைரக்‌ஷனை (அவ்வப்பொழுது) கவனிக்க, அண்ணா சாருஹாசன், தயாரிப்பு—நிர்வாகத்தை (பெயரில்லாமல்) மேற்கொண்டுள்ளார்.



● ''பகோடா காதரைப் படங்களில் காணோமே, ஏன்?'' என்ற விவரத்தை அவரிடமே கேட்டேன். ''அதை ஏன் சார் கேக்கறீங்க'' என்று ஆரம்பித்துத் தொடர்ந்தார்: ''சினிமாவெல்லாம் வாணாம் சார். ஏதோ ரெண்டு ஸ்பெஷல் நாடகம் நடிச்சோம்னாலே பிழைச்சுக்கலாம். நாடகங்கள்தான் சார் கையில் காசு வாயில் தோசை. சினிமாவிலோ வாய்ப்புக் கிடைப்பதில்லை. அப்படியே கிடைத்தாலும் பாத்திரம் பெரிதாக இல்லை. இரண்டுமே அமைந்தாலும் பணம் கிடைப்பதில்லை. பின் எதற்காக நடிப்பதாம்?''

— சலன்

சாருஹாசன்— கமல்ஹாசன்



படிப்படியா ஏறுவோமா?
ரெண்டு ரெண்டு படியா தாவிடலாமே!
யோசனை என்ன..? ஒரே பாய்ச்சலா பாய்ஞ்சு காலிலே போய் விழ வேண்டியது தானே!
அர்ஸ் காங்கிரஸ்
இந்திராவுக்கு ஆதரவு
இந்திரா அரசுக்கு ஆதரவு
இந்திரா அரசின் பட்ஜெட்டுக்கு ஆதரவு






# மதுராந்தகத்தில் ஒரு மரணம்

கொலையா? தற்கொலையா? — சத்தியம் பண்ண நாம் தயாராயில்லை.

குற்றவாளிகள் யாரோ? சுட்டிக்காட்ட நாம் விரும்பவில்லை.

ஆனால் ஒன்று நிச்சயமாகத் தெரிகிறது: மதுராந்தகத்தில் பரிதாபத்துக்குரிய முறையில் மடிந்தது, ஹரிஜனப் பெண் ஞானசுந்தரி மட்டுமல்ல. அவளுடைய துயர முடிவுடன் சேர்ந்து வேறுபல மரணங்களும் ஏற்பட்டிருக்கின்றன.

தமிழ்த் திருநாட்டில் மனிதாபிமானம் மடிந்துவிட்டது. பெண்களைத் தாயாகவும் தெய்வமாகவும் போற்றும் பண்பு கொலையுண்டுவிட்டது.

நல்லொழுக்கம் தற்கொலை செய்துகொண்டு விட்டது.

சத்தியம் செத்தொழிந்து விட்டது.

ஹரிஜன் என்று காந்தியடிகள் எந்த நோக்கில் பெயர் வைத்தாரோ அந்த உன்னதமான அர்த்தத்தை அழித்து ஒழித்தாகிவிட்டது.

இடுகாட்டில் ஞானசுந்தரியின் உடல் எரியூட்டப்பட்ட போது மேற்சொன்னவற்றுக்கும் அந்திமக் கிரியைகள் செய்தாகி விட்டது.

தமிழன்னை வெட்கித் தலைகுனிந்திருக்கிறாள். அவளுக்கு ஏற்பட்டுள்ள துயர் ஆண்டுகள் பலவானாலும் துடைக்கப்பட முடியாது.

தமிழக அரசியலுக்குப் பெரிய களங்கம் உண்டாகிவிட்டது. என்னதான் பூசி மழுப்பினாலும் வெள்ளையடித்துப் பார்த்தாலும் கறை நீங்காது.

இறையுணர்வும் தார்மீக உணர்வும் இல்லாத அரசியல், அச்சத்தை விரட்டி ஆணவத்தை வளர்க்கும். அரக்கத் தன்மைக்கு அடிகோலும். அதற்கு ஒரு நிரூபணமே ஞானசுந்தரியின் மரணம்.

ஜாதிச் சண்டைகள், கோஷ்டிப் பூசல்கள், அரசியல் கட்சி மோதல்கள் போன்ற அநாகரிகங்களையெல்லாம் நாம் வெறுத்தாலும் கூட, ஆய்ந்து பார்க்கும் போது நம்மால் ஓரளவு புரிந்துகொள்ள முடிகிறது.

ஆயின் ஓர் அபலைப் பெண் ஒரு மக்கள் பிரதிநிதியின் — எம். எல். ஏ யின்— காரியாலயத்தில் தூக்கிலே தொங்குவதை எப்படி சகிப்பது?

அதையொட்டி நடக்கும் அரசியல் வாதப் பிரதிவாதங்களை, பரஸ்பர குற்றச்சாட்டுக்களை, ஒத்திகை பார்த்து, திட்டமிட்டு நடத்தும் நாடகங்களை எப்படி ஜீரணிப்பது?

சேச்சே! தமிழகமே உன் தலையெழுத்து இப்படியா ஆக வேண்டும்?

''என்னை இப்போதாவது நம்புங்கள்'' என்று சுவரில் எழுதியது ஞானசுந்தரிதானா? அல்லது வேறு யாரோவா? — நமக்குத் தெரியாது. எதை நம்ப வேண்டும் என்று அந்தச் சுவர் வாசகம் கோருகிறது? — நாம் அனுமானிக்கத் தயாராயில்லை.

ஆனால் வேறு சிலவற்றை நிச்சயமாய் நம்புகிறோம்.

ஞானசுந்தரி அரிஜனப் பெண் — நம்புகிறோம்.

வயது பதினாறு, இளவயது மங்கை — நம்புகிறோம்.

அவள் ஏழுமாத கர்ப்பமாக இருந்தாள் — நம்புகிறோம்.

வேலை தேடி அலைந்தாள் — நம்புகிறோம்.

அதற்காக அ.தி.மு.க. எம். எல். ஏ. யின் உதவியாளரை அணுகினாள் — நம்புகிறோம்.

இப்போது ஓர் அபலையின் மரணத்தில் அரசியல் ஆதாயம் தேடப் படுகிறது — நம்புகிறோம்.

எத்தனை மரணங்களை மேலே நாம் பட்டியல் போட்டுத் தந்திருந்த போதிலும் சட்டமும் நீதியும் தமிழகத்தில் இன்னும் செத்து விடவில்லை - நம்புகிறோம்.

உண்மைகள் வெளிப்படும் என்றும் குற்றவாளிகள் யாரானாலும் தப்ப மாட்டார்கள் என்றும் தண்டனை பெறுவார்கள் என்றும் நம்புகிறோம்.

முதலமைச்சர் எதையும் மூடி மழுப்ப அனுமதிக்கமாட்டார் என்று நம்புகிறோம்.

நம்பிக் காத்திருக்கிறோம். நாம் மட்டுமல்ல. ஞானசுந்தரியைப் பெற்றெடுத்து இன்று துயரக்கடலில் மூழ்கியுள்ள அவள் தாயாரும்தான்.

1981 மார்ச் 22

ரௌத்திரி பங்குனி 9

மலர் : 39 இதழ் : 34



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# வஸந்த்! வஸந்த்!

சுஜாதா

## 12. அடித்தவர்யாரோ?

"என்னங்க? மறுபடி கொண்டு வந்துட்டீங்களா? ஆளு பொழைச்சுட்டானு!"

"இல்லை டாக்டர்! இது வேறே கேஸு!"

"அட! என்ன ஆயிட்டிருக்கு இந்த ஊர்ல? ஒரு நாள்ள ரெண்டு கொலையா?"

"டாக்டர் இந்த ஆள் பொழைக்க சான்ஸ் இருக்குன்னு நினைக்கிறேன் தயவு செஞ்சு சீக்கிரம் ஏதாவது சிகிச்சை பண்ணுங்கன்னு!"

"நான் என்னால முடிஞ்சதைச் செய்யறேன் மிஸ்டர்! எனக்கு இருக்கிற வசதிகளை வெச்சுக்கிட்டு இதபாருங்க ஸால்லான் இன்டென்ட் பண்ணி மூணு மாசம் ஆச்சு!"

"ஆமாங்க. இந்த மாதிரி வசதி குறைஞ்ச இடங்களில் வேலை செய்யறது ரொம்பக் கஷ்டந்தான் டாக்டர். உங்க மாதிரி ஆளுங்கதான் நிஜமாவே சமூக சேவை செய்யறீங்க."

பேசிக் கொண்டே சதாசிவத்தின் காயங்களைக் கவனித்து டாக்டர் ஒவ்வொன்றாகத் துடைத்துக் கொண்டே வந்தார்.

"மண்டைல பலமா நெத்தியிருக்காங்க. அதான் மயக்கத்தில இருக்கார். கொஞ்ச நேரத்தில மயக்கம் தெளிஞ்சுடுவார். ச்ச்ச் அடாடாடா என்னமா அடிச்சுப் போட்டிருக்காங்க. யார்யா இப்படி அடிச்சது?"

இன்ஸ்பெக்டர் "அது தெரிஞ்சாத்தான் பரவாயில்லையே" என்று வஸந்தைப் பார்த்தார்.

"என்ன என்னைப் பாக்கறீங்க. நான்தான் நடந்தது பூரா சொல்லிட்டேனே."

"அதுக்கும் இதுக்கும் சம்பந்தம் இருக்கும்னு நினைக்கிறீங்களா?"

கணேஷ் யோசனையில் இருந்தான்.

"பாஸ் உங்களைத்தான் கேக்கறார் ஸார்."

"என்ன?"

"காலைல கத்திக்குத்து, சாயங்காலம் கையடி. இந்தக் கிராமத்தில ஒரு வருசத்துக்கு உண்டான குத்தங்கள் ஒரு நாள்ள நடந்து போச்சு. இதான் கடைசியா? இன்னும் பாக்கியிருக்கா?"

"தெரியலிங்க. அந்தாள் பிழைச்சுடுவாரு. அவருக்கு மயக்கம் தெளிஞ்சதும் கேட்டுப் பாக்கலாம்" வஸந்த் ஒரு சிந்தனை சிகரெட் பற்ற வைத்துக் கொள்ள கணேஷுடன் வெளியே வந்தான்.

"என்ன பாஸ்? பேசவே இல்லை!"

"நீதான் பேசணும், நீ தானே பாத்தே எல்லாத்தையும்!"

"நான் பாத்தது அடிதடி முடிஞ்சதுக்கப் புறம் பாஸ்."

"நான் சொன்ன மாதிரி புறக்கடைப் பக்கமா போய் எட்டிப் பாத்திருந்தா அடிச்ச பார்ட்டி யாருன்னு தெரிஞ்சிருக்கும், இந்நேரத்துக்கு. நீயா ப்ளானை மாத்தி..."

"போறது விடுங்கோ!"

"அந்தபார்ஸல்என்னஆச்சு?"

"எனக்கென்னவோ அது இப்ப சதாசிவத்தின் வீட்டில் இருக்காதுன்னு தோணுது. கணேஷ், அந்த பார்ஸலுக்குத்தான் இந்த அலை அடிபடுதுன்னு நினைக்கிறேன்."



''எதுக்கும் இன்ஸ்பெக்டரை வெச்சுக் கிட்டு அந்த வீட்டை ஒரு தடவை துப்புரவா தேடிடலாம், இந்த ஆள் மயக்கம் தெளிஞ்சு வந்தா கொஞ்சம் பேசுவான்?''

''அதுக்குள்ள போன கேஸ் மாதிரி பிராணனை விட்டுறப் போறான்?''

''இல்லே வஸந்த்! இது போகாது. காயங்கள்ளாம் பாத்த இல்ல? எல்லாம் ஸுப்பர் ஃபிஷியல். கொஞ்சம் முகம் வீங்கியிருக்கு. இந்த சதாசிவத்தை அவங்க கொல்ல உத்தேசிக்கலே. அவன் செஞ்ச ஏதோ ஒரு காரியத்துக்குத்தண்டனை கொடுக்க நாலுதட்டு தட்டி இருக்காங்க.''

''தண்டனை நம்மோட வியாபாரம் பேசினதுக்காக இருக்குமோ?''

''இருக்கலாம். அவன்கிட்ட கொஞ்ச நேரத்துக்குத் தற்காலிகமா ஒப்படைக்கப் பட்ட பொருளை அவன் விக்க முயற்சி பண்ணியிருக்கலாம். அது அவங்களுக்குத் தெரிஞ்சு போய்...''

''அவங்கங்கறது யாரு?''

அவங்க! அவ்வளவுதான்! ஒட்டு மொத்தமாத்தான் சொல்ல முடியுமே தவிர எத்தனை பேர் இருக்கா, எத்தனை கோஷ்டி அதில ஒண்ணும் சொல்ல முடியாது.''

''பொருள் என்னன்னும் சொல்ல முடியாது.''

''ம்ஹூம்!''

''பாஸ் இதைப் பாருங்க'' வஸந்த் தன் பையிலிருந்து சதாசிவத்தின் வீட்டில் பொறுக்கிய அந்தப் பொருளைக் காட்டினான்.

''என்ன இது!''

''சதாசிவம் கிடந்தாரில்லே? அவர் கிட்ட இந்தத் துண்டு கிடந்தது. இதில இருந்து ஏதாவது தெரியறதான்னு பாக்கலாம்னு பொறுக்கிட்டு வந்தேன்.''

கணேஷ் அதை உரசி, தேய்த்துப் பார்த்தான். மூக்கில் வைத்துப் பார்த்தான்.

''நார்த்தங்கா வாசனை அடிக்குது. கூடவே ஒரு கெமிக்கல் ஸ்மெல்! வரப்ப நானும் மூந்து பாத்துட்டேன்'' என்று வஸந்த் சொன்னதைக் கவனிக்காமல்கணேஷ் அதைத் திருப்பித் திருப்பிப் பார்த்தான்.

''என்னன்னு கண்டு பிடிக்க முடியலே. பார்க்கலாம் அது எதில இருந்து வந்த துண்டுன்னு நினைக்கிறே?''

''அந்த பார்ஸலிலிருந்துதான் வந்திருக்கணும்னு நினைக்கிறேன்.''

''எப்படி?''

''ஏதோ பட்சி சொல்லுது. இட்சினி!''

''அந்த பார்ஸல்! அந்தப் பார்ஸல்! அதுலதான் வஸந்த் இருக்கு சூட்சுமம்.''

''வீடு காலியாத்தான் இருக்கும். ஒரு நடை போய்ப் பார்த்துட்டு வந்துடவா?''

''வேண்டாம். போலீஸ் ஏற்கனவே நம்மைச் சந்தேகப்படறாங்க. அந்த இன்ஸ்பெக்டர் நம்மைப் பாக்கற பார்வையே சரியா இல்லே.''

''நம்மை எதுக்காகச் சந்தேகப் படணும்?''

''நாம ரெண்டு பேரும் ஊருக்குள்ள வந்தப்புறம்தானே எல்லா திடுக்கிடும் சம்பவங்களும் நடந்திருக்கு. இந்தத் துண்டை மெட்ராஸில ஃப்ரெண்ட்ஸ் கிட்டக் குடுத்துப் பரிசோதனை பண்ணிப் பார்த்துடலாம்.



ஏதோ மெட்டாலிக்காத்தான் எனக்குத் தெரியுது.''

''ஒரு சிலையோட பகுதியோ? பாஸ் இப்படி இருக்கலாமில்லையா? அவங்க தேடறது ஒரு விலை உயர்ந்த சிலையை! அது இது நாள்வரை ராஜ ராஜன் கிணத்துல நாத்தத் தோட நாத்தமா உள்ளே கிடந்திருக்கு. இந்த விவரம் சரித்திரக் குறிப்புக்கள் மூலமா அவங்களுக்குத் தெரிய வந்து இங்க வந்து அதைத் தோண்டி எடுத்துட்டாங்க. சதாசிவத்துங்கிட்ட டெம்பரரியா கொடுத்து வெச்சிருக்காங்க. அந்த ஆள் என்னடான்னு சந்தடி சாக்கில அதை நம்ம கிட்ட விக்கப் பாத்திருக்கான். அது தெரிஞ்சு அவனே அடிச்சுப் போட்டுச் சிலையைப் பிடுங்கிண்டு போய்...''

''வர வர சுஜாதா கதை நிறையப் படிக்க ஆரம்பிச்சுட்டியா?''

''ஏன் பாஸ், இந்தத் தியரிக்கு என்ன?''

''கத்திக் குத்துப் பட்டவன் என்ன ஆச்சு?''

''அவன் இந்தச் சிலை கண்டு பிடிச்ச விவரத்தை நம்ம கிட்டச் சொல்ல வந்திருக்கலாம். அல்லது... பிரில்லியண்ட்! டேய் வஸந்த் உன் மூளையே மூளைடா!''

''என்னடா கண்டு பிடிச்சே சொல்லித் தொலை!''

''கத்திக் குத்துப் பட்டுச் செத்தானே அவன் யாரு?''

''ஆர்க்கியாலஜி டிபார்ட்மெண்ட் காவல்காரன். கூழமந்தல்.''

''அவன்தான் சிலையை எடுத்திருக்கிறதைப் பாத்திருக்கான்.''

''அப்படியே வெச்சுக்க.''

''அவனும் சதாசிவமும் பார்ட்னர்ஸ்! அதான் நம்ம கிட்ட சதாசிவத்தைப் போய்ப் பார்க்கச் சொல்லி யிருக்கான். அவன் எப்படியோ அந்தச் சிலையை அபேஸ் பண்ணிக்கிட்டு சதாசிவத்துக்கிட்டக் கொடுத்து வெச்சிருக்கான். ரெண்டு பேரும் வியாபாரத்தைப் பிளான் பண்ணியிருக்காங்க.''

''வஸந்த்! வஸந்த்! போட்டுக் குழப்பாதேடா.''

இன்ஸ்பெக்டர் வெளியே வந்தார்.

''என்ன ஸார் ஆளு கண் முழிச்சானா?''

''மூச்சு விட்டுக்கிட்டுத்தான் இருக்கான்.... ஸ்....அப்பாடா.''

''மிஸ்டர் வஸந்த்! கொஞ்சம் வாங்க.''

''இங்கதான் ஸார் இருக்கேன். என்ன வேணும்?''

''நீங்க அந்த ஆளைப் பாக்கப் போனீங்களா?''

''ஆமா.''

''எதுக்கு?''

''எதுக்கு? நல்ல கேள்வி. அது வந்து எப்படின்னா....'' வஸந்த் கணேஷைப் பார்த்தான். கணேஷ் தயங்காமல் ''அவர் கிட்ட ஒரு விவரம் கேக்கப் போயிருந்தோம்'' என்றான்.

''என்ன விவரம்?''

''முன்னாலே கத்திக் குத்தில இறந்து போனாரே ஒரு ஆள், அதான் அந்தக் கூழமந்தல் ஆசாமி, அவர் எங்கிட்ட காலைல வந்தபோது சதாசிவம்னு ஒராளைப் பார்க்கச் சொன்னான்.''

''அப்படியா? அதை ஏன் என்கிட்டச் சொல்லலை?''

''சொல்றதுக்குச் சந்தர்ப்பம் வரலை. நீங்க கொஞ்சம் பிஸியா இருந்திங்க. சந்தர்ப்பம் கிடைக்கிறபோது சொல்லலாம்னு நெனைச்சுக்கிட்டிருந்தோம்.''

''இப்பத்தான் சந்தர்ப்பம் வந்ததாக்கும்'' என்றார் கொஞ்சம் அதட்டலாக.

''ஆமாம்.''

''அதாவது, நீங்களா, சொந்த முயற்சியா துப்புத் துலக்கப் பார்த்திருக்கீங்க.''

''அப்படி இல்லீங்க. அந்தாளு என்னவோ சொல்ல வந்தான். அதை...''

''இதெல்லாம் நல்லால்லை. போலீஸ் எதுக்கு இருக்கோம்? நீங்க ரெண்டு பேரும் லாயரா?''

''ஆமாங்க.''

## நடமாடும் திராவிடம்!



● மேலட்டையில்...

குமாரி கலாரஞ்சனி. 'கலகல' ரஞ்சனி! என்றழைக்கப்பட வேண்டியவர். காரணம் - தீந்தமிழும், சுந்தரத் தெலுங்கும், தெவிட்டாத ஆங்கிலமும், கனிமிகு கன்னடமும், கவின் மிகு மலையாளமும் இவர் நாவில் நடம் புரிகின்றன. சுருங்கக் 'கூறினால்' இவர் நடமாடும் திராவிடம். சில திரைப் படங்களில் குழந்தை நட்சத்திரமாகத் தோன்றியிருக்கும் இவர் இப்போது நடிப்பை விடுத்து, படிப்பில் கவனம் செலுத்தி வருகிறார். பள்ளி இறுதி வகுப்பை இன்னும் சில திங்களில் முடிக்கவிருக்கும் இவரிடம், ''கலை ஆர்வம் மிக்க நீங்கள் கல்வி ஆர்வம் கொண்டது எப்படி?'' என்று வினவியபோது ''நடிப்பு என்பது அழகை மட்டுமின்றி அறிவையும் சார்ந்தே அமையும்'' என இவர் தெலுங்கில் கூறியதன் பொருள் உடனே புரியவில்லை. எனினும், இவருக்காகக் காத்திருக்கும் எதிர்காலம் நமக்குப் புரிந்தது.

பேட்டி : வெற்றி

வண்ணப்படம் : மேகலா.

''சட்டம் படிச்சவங்களே இப்படிச் செய்ய லாமா?''

''என்ன செஞ்சோம்?'' என்றான் வஸந்த்.

''இந்த மாதிரி ஒரு ஆளு அடிபட்டிருக் கான், அவனைப் போய் நீங்க பாத்திங்கன்னு சொல்றீங்க. யாருக்குத் தெரியும் அந்த ஆளை நீங்களே அடிச்சுப் போட்டிருக்கீங் களோ என்னவோ?''

''நல்லா ஜோக் அடிக்கறீங்க.''

''அடப் போய்யா! உங்ககூட ஜோக் அடிக்கறதுக்குத்தான் எனக்கு வேலை குடுத்து, சம்பளம் குடுத்து வெச்சிருக்காங்க.''

''இல்லை இன்ஸ்பெக்டர், எவனாவது புத்தி ஸ்வாதீனம் இருக்கிறவன் ஒரு ஆளை அடிச் சுப் போட்டு உடனே அவனை வண்டி வெச்சு குண்டுக் கட்டா தூக்கிண்டு வந்து போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு வருவானா?''

''இல்லிங்க. போலீஸ் கண்ணில மண் ணைத் தூவுறதுக்குச் சிலபேர் அப்படிச் செய்தாலும் செய்வாங்க.''

''பாஸ் தமாஷா இல்லை?''

''இல்லை'' என்றான் கணேஷ். ''இன்ஸ் பெக்டர் எங்களோட போனஃபைட்ஸ் பற்றி உங்களுக்குச் சந்தேகம் இருக்கிற மாதிரித் தெரியுது. இதைத் தீக்கறதுக்குச் சுலபமா ஒரு வழி இருக்கு.''

''என்ன?''

''அந்தாளு முழிச்சுக்கிட்டப்புறம் நீங்களே அவனைக் கேட்டுக்குங்களேன்.''

''கேக்கத்தான் போறேன், மிஸ்டர் கணேஷ் கேக்கத்தான் போறேன்.''

''ரெண்டு தடவையா?''

''அவன்தான் இப்ப முக்கியமான சாட்சி. அவன் கிட்ட இருந்து அந்த ஸ்டாபிங் பத்தியும் முக்கியமான தகவலை எதிர் பார்த்துக்கிட்டு இருக்கேன். பார்க்கலாம்.''

டாக்டர் கை கழுவிக் கொண்டு வெளியே வந்தார்.

''எப்படி இருக்காரு?''

''அப்பப்பா! செம்மையா அடிச்சு மூஞ்சி வீங்கியிருக்கு. தோள் பட்டை வேற வீங்கி இருக்கு. எனக்கென்னவோ காலர் போன்ல க்ராக் இருக்கலாம்னு தோணுது.''

''பொழைச்சுருவாரில்ல?''

''பொழைச்சுருவார். இன்னும் அரை மணியில மயக்கம் தெளிஞ்சுடும்.''

''அப்ப என்னைத் தவறாமக் கூப்பிடுங்க. வேத்து ஆளுங்களை அனுமதிக்க வேண்டாம்'' என்று வஸந்தைப் பார்த்துக் கொண்டே சொன்னார். ''என்ன மிஸ்டர் வஸந்த்! உங்ககிட்ட அந்தாளு ஒண்ணுமே பேச லியா?''

''இல்லிங்க. நான் போனபோதே மயக்கத் திலதான் இருந்தாரு.''

''அந்த அடி அடிச்சிருக்கீங்க... ஐ மீன் அடிச்சிருக்காங்க.''

வஸந்த், ''பாஸ்! திஸ் இஸ் தி லிமிட்! அவரு நம்மை அனாவசியமாச் சந்தேகிக் கிறார்.'' தொடர்ந்து, ''இன்ஸ்பெக்டர் செக்ஷன் 197(1) ஸி. ஆர். பி. ஸி. படி உங்களுக்குநிறையப் புரொடெக்ஷன்இருக்க லாம். ஆனா செக்ஷன்...''என்று இழுத்தான்.

''வாயை மூடுடா. என்கிட்ட சட்டம் பேசறியா!''

''மூடு ? டாவா? என்னது கொஞ்சம் சட்டம் எல்லை மீறுது. இன்ஸ்பெக்டர் இவர் யார் தெரியுமா? கணேஷ்! இவர் கிராஸ் எக்ஸாமின் பண்ணி பஞ்சராப் போன போலீஸ் ஆபீஸர்கள் எவ்வளவு பேர் தெரியுமா? நானூத்தி நாப்பத்து நாலு.''

''வஸந்த்! ஷட் அப்! இன்ஸ்பெக்டர் இவன் கொஞ்சம் தத்துப் பித்துன்னு உளறு வான். மைண்ட் பண்ணாதீங்க.''

''அரெஸ்ட் பண்ணி உள்ளே தள்ளினா சரியாப் போயிடும்.''

''நீங்க கோவிச்சுக்காதீங்க. எதுக்கு விவ காரம்? இப்ப அந்த ஆளு கண் முழிச்ச பிற்பாடு எல்லாம் துல்லியமாத் தெரிஞ்சுடப் போடறது. எங்களோட இன்னொசென்ஸ் நிரூபணம் ஆனப்புறம் நாங்க போறோம்.''

''எங்க போயிடுவீங்க? எங்கயும் போய் விட முடியாது.''

''நாங்க போறதுன்னு தீர்மானிச்சா உங்க தாத்தா வந்தாக்கூடத் தடுக்க முடி யாது. இட்ஸ் எ ஃப்ரீ கண்ட்ரி.''

''பத்தியா என்ன ராங்கியாப் பேசறான்!''

''வஸந்த்! இந்த இடத்தை விட்டு விலகிப் போறியா இல்லையா? என்னடா அனாவசி யத்துக்குக் கேஸை காம்ப்ளிகேட் பண்ணாதே. ஏற்கனவே நம்ம மேலே சந்தேகப்படறார்.''

''படட்டும். மடியில புள்ளை யிருந்தாத் தானே வழியில களவானைப் பார்த்தாப் பயம்?''

''போ. ஓழி. தனியாப் போய் நில்லு.''

வஸந்த், ''அப்புறம் பார்க்கலாம் ஸார்'' என்று இன்ஸ்பெக்டரிடம் விடைபெற்று, ஓரத்தில் போய் சிகரெட் பற்ற வைத்தான்.

டாக்டர் வெளியே வந்து ''இன்ஸ்பெக்டர் வாங்க. அந்தாளு முழிச்சுக்கிட்டான். பேச ஆரம்பிச்சுட்டான்'' என்றார்.

இன்ஸ்பெக்டர் குச்சி சுழற்றிக் கொண்டு உள்ளே செல்ல, கணேஷ் சற்றே கவலைப் பட்டான். மெல்ல அந்த டிஸ்பென்ஸரிக் கட்டிடத்தை அணுகினான். வஸந்த் விரோத பாவத்துடன் மரத்தடியிலேயே நின்று கொண்டிருக்க அறைக்குள் பேசுவது தெளி வில்லாமல் கேட்டது. இன்னும் கொஞ்சம் அருகே செல்ல, மெலிதாக இருந்தாலும் ஸ்பஷ்டமாகக் குரல்கள் கேட்கத் துவங்க:

''சதாசிவம், சதாசிவம்!''

''ம்! அம்மா! வலி!''

''மருந்து போட்டிருக்கு! பயப்படாதே. உனக்கு உயிருக்கு ஆபத்தில்லை.''

''ஆபத்தில்லையே, ஆபத்தில்லையே?''

''எனக்கு ஒரே ஒரு விஷயம் மட்டும் சொல்லிடு. பாக்கியை உடம்பு சரியானப் புறம் கேட்டுக்கறேன்.''

''என்ன?'' — ஈனஸ்வரம்.

''உன்னை இப்படி அடிச்சுப் போட்டது யாரு?''

சற்று நேர மௌனம். அதன் பின் மெல்லிய குரலில், தீர்மானமாக:

''அதான் அந்த கணேஷும் வஸந்தும்!''

(தொடரும்)

திருமதி இந்திரா காந்தி.குண்டு துளைக்க முடியாத உடைஅணிந்து அதற்கு மேல்தான் பிளவுஸ் போட்டுக் கொள்கிறார்.

சுவஸ்ரீகலீ-ஸ்ரீநு

# ISI தர முத்திரை பெற்றது
# விநிபா சந்தன முகப்பவுடர்




விநிபா சந்தன முகப்பவுடர்
தரமாகத் தயாரிக்கப்படு கின்றது. சான்றாக இப்போது
ISI–யின் தரமுத்திரை பெறுகின்றது.
சருமத்திற்கு மென்மையும்,
பொலிவும் அளிக்கவல்ல தூய
100% மைக்ரோஃபைன்
செய்யப்பட்ட மைசூர் சந்தனம்,
இந்தியாவின் அபூர்வ மூலிகைகள்.
மேனாட்டு வாசனை திரவியங்கள்,
உயர்ந்த அத்தர் வகைகள், தூய
புனுகு, ஜவ்வாது, அரகஜா
இவற்றை ஒருங்கே கலந்து நவீன
விஞ்ஞான ரீதியில்
தயாரிக்கப்படும் நறுமணம்
கமழும் பவுடர் விநிபா.










விநிபா ப்ராடக்ட்ஸ்
''கோகுல் கார்டன்ஸ்,'' கும்பகோணம்.

Criterion VP 3668 TMB

# பி.ஸ்ரீக்கு 96



● அடியேன் 14–3–81ல் எனது தொண்ணூற்றாறு வயதில் அடியெடுத்து வைக்கிறேன். இத்தருணத்தில் என் இதயம் கனிந்த அன்பும் ஆசியும் வாழ்த்துக்களும். விட்டலபுரத்தில் அன்பர்கள் சிறிதளவு பிறந்த நாளைக் கொண்டாடுகிறார்கள்.

''... மூப்பு உன்னைச் சந்திப்பார்க்கில்லை திருமாலே நின் அடியை வந்திப்பார் காண்பார் வழி'' என்னும் பொய்கையாழ்வார் வாக்கு. நெறி காட்டிக் குறிக்கோளையும் தெளிவாய் உணர்த்துகிறது. ஆகவே வாழ்வுப் பெரும் சக்தியை இயன்றவரை நன்கு உணர்ந்திருக்கிறேன்..

விட்டலபுரம் — பி. ஸ்ரீ

● எம். ஜி. ஆர். பதவி ஏற்பு விழாவின் போதும், உலகத் தமிழ் விழாவின் போதும் வீணான கோடிக் கணக்கான ரூபாய் உமக்கு நினைவில் வரவில்லை. டில்லியில் யாரும் இது வரை காணாத ஒரு பேரணியை (25 லட்சம் பேரை) காட்டியதால் அச்சமுற்று வயிற்றெரிச்சல் அடைந்த நீர் ஆட்சி செலவு செய்கிறது என்று நீலிக் கண்ணீர் வடிக்கிறீர்.

மேலப்பாளையூர் — சுமாலி

● ஆடம்பரச் செலவு வேண்டாமா? பிரதமரா சொல்கிறார்! ஹா, ஹா, ஹா. இமய மலைச் சாரலில் நடந்த கார்ரேஸ் முழுங்கிய பெட்ரோல் சிக்கனமோ? கோரிக்கைகள் இல்லாத விவசாயிகள் பேரணி, கலர் டீ.வி. இவை சிக்கனத்தின் சின்னமோ? "Penny Wise and Pound Foolish" மட்டுமல்ல. Slaves புத்தியும் இருக்கிறது சார். சுவாசிக்கும் காற்று முதல் குடிக்கும் தண்ணீர் வரை கூடவே கொண்டு வந்து டில்லியைக் குட்டி ரஷ்யாவாக்கிய பிரேஷ்னேவிடம் செய்த நமஸ்காரங்கள் அதைத்தான் நிரூபிக்கிறது!

சிதம்பரம் — சிவராஜகுமார்

● கே. சீனிவாசன் அவர்களின் விமர்சனக் கட்டுரை படித்தேன். 5–3–81 இந்து நாளிதழில் இடம்பெற்ற இந்துமகா கடலின் வரைபடம், அமைதிப் பூங்காவாக இந்து மகாக் கடல் இருக்கவே முடியாதென நன்கு விளக்குகிறது. 13 அமெரிக்கக் கடற்படைத் தளங்களெங்கே? மூன்று ரஷ்யப் படைத் தளங்கள் எங்கே?

அமெரிக்காவின் அடாவடிப் போக்கினை முறியடிக்கத்தான் இந்தியாவின் போக்கு மாறவேண்டுமே யன்றி ஸ்ரீனிவாசன் கூறும் விதத்தில் அல்ல.

வாணியம்பாடி — ஏ. வி. அரசு

● நடைபாதைப் பகுதியில் (1–3–81 இதழ்) பி.டி.சி. லாரி ஒன்றில் பட்டறைப் பிரிவு என்பதைத் தவறுதலாக 'பட்டைப் பிரிவு' எனக் குறிப்பிடப்பட்டிருந்ததாக எழுதி இருந்தீர்கள். 'பட்டைப் பிரிவு' என்பதே சரி. சக்கரங்களுக்கு மேல் வரும் 'Flat' அடுக்குகள் தாம் தமிழில் 'பட்டை' எனப்படுகிறது.

சென்னை-15 — பி. ப. கமலாகந்தர்

● ''வெட்டொன்று துண்டிரண்டு'' நளினி சாஸ்திரியின் ''பொன்னெழுகி'' விமர்சனம்!

பெங்களூர் — ப. மூர்த்தி

● சத்தியமாய், சுந்தரமாய் கல்கி தந்த விமர்சனம் நன்று! ''இது போன்ற வயதுக்கேற்ற பாத்திரமேற்றால் சிவாஜி சகாப்தம் முடியாது'' என்று மனமார எழுதியதற்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறது நடிகர் திலகத்தின் ரசிக இதயம் ஒன்று!

தங்கநல்லூரர் — கா. மு. பாரூக்

● 'மௌன கீதங்கள்' வெற்றிகரமான ஐம்பதாவது நாளை நெருங்கும்போது அதனுடைய விமரிசனத்தை வெளியிட்டிருக்கிறீர்களே! ஒசி பாஸ் கிடைக்க இத்தனை தாமதமா?

600035 — சி. பூபால் சிங்

● 22–2–81 இதழில் நிரஞ்சனா எழுதிய துணுக்கில் இந்தியாவில் டெலிஃபோன் 1888ல் தொடங்கப்பட்டதாக எழுதியுள்ளது தவறு. சென்னையிலேயே முதல் டெலிஃபோன் எக்ஸ்சேஞ்ச் 1882ல் அமைந்துவிட்டது. நூற்றாண்டு விழா நெருங்குகிறது.

3–3–81 — எஸ். ராமசாமி
பொதுஜனத் தொடர்பு அதிகாரி,
சென்னை தொலைபேசி

● வித்தியாசமான கண்டக்டர் நெடுஞ்செழியன் பேட்டி படித்தேன். எல்லா நடத்துனரும் இப்படி நடந்தால் பல்லவன் நல்லவனாக மட்டும் அல்லாமல் நம்மவனாகவும் ஆகிவிடுவான்.

பெரம்பூர் — மணிமகன்

● வெயில் நேரமாக இருந்தாலும் உங்கள் மூளை சிறப்பாகத்தான் வேலை செய்கிறது. ராஜீவ் குவேந்தரின் பொருத்தமான படங்களைத் தேர்ந்தெடுத்து அர்த்தமுள்ள ஓர் அரசியல் நாடகத்தை நடுப் பக்கத்தில் அரங்கேற்றிவிட்டீர்களே! பேஷ்! பேஷ்!

மதுரை-9 — இசைமுத்து மீரு

# யுரேனஸ் -200 ஆண்டு



இன்றைக்குச் சரியாக இருநூறு ஆண்டுகளுக்கு முன்னுல் ஒரு நாள் மாலை வேளையில் (மார்ச் 13, 1781)...
ஆங்கில வானியல் மேதை ஸர் ஜான் பிரடரிக் வில்லியம் ஹெர்ஷல் என்பவர் மிதுன ராசி என்று நாம் சொல்கிற ஜெமினி நட்சத்திரக் கூட்டத்தைப் பார்த்துக் கொண்டிருந்தபோது அந்த அதிசயம் நிகழ்ந்தது.
அதுவரை கண்ணுக்குப் புலனுகியிராத ஒரு ஒளிப் புள்ளியை அவர் அடையாளம் கண்டுபிடித்தார். தம் கண்ணில் பட்ட அந்த ஒளிப் புள்ளியைப் பற்றி மற்ற நண்பர்களுக்கு அறிவித்தார்.
அந்த ஒளிப் புள்ளி நட்சத்திரமோ வால் நட்சத்திரமோ இல்லை. சூரியக் குடும்பத்தில் சனிக் கிரகத்துக்கு அடுத்ததாய்ச் சுழன்று வரும் ஒரு கிரகம் என்பது அடுத்த ஆண்டில் உறுதி செய்யப்பட்டது.
சூரிய குடும்பத்தில் ஏழாவது கிரகமாய் அறியப்பட்ட இதற்கு வில்லியம் ஹெர்ஷெல் வைத்த பெயர் ஜார்ஜியம் சைடஸ் என்பது. மூன்றும் ஜார்ஜ் மன்னரின் நினைவாக இந்தப் பெயரை அவர் சூட்டினுர். ஆனுல் மற்ற வானியலாளர்கள் மிகவும் பழைமையான கிரேக்கக் கடவுளரின் பெயரை இதற்குத் தர விரும்பினுர்கள். வானியலறிஞர் போட் தந்த பெயர்தான் யுரானஸ்.
சூரியனிலிருந்து நாம் பெறுகிற ஒளியில் 360ல் ஒரு பங்கே பெறுகிற யுரானஸ் கிரகத்தை வெறும் கண்ணுல் பார்க்க மிகவும் கூர்மையான பார்வை வேண்டும். மங்கலான மஞ்சள் நிற நட்சத்திரமாக இது தெரியும்.
ஹெர்ஷெல், 1787ம் ஆண்டில் யுரானஸுக்கு இரண்டு சந்திரன்கள் இருப்பதையும் கண்டறிந்தார். உண்மையில் யுரானஸை ஐந்து சந்திரன்கள் சுற்றி வருவது பின்னர் கண்டறியப்பட்டது.
யுரானஸ் கண்டறியப்பட்டதானது. அதன் பின் நெப்டியூன் (1846) புளுட்டோ (1930) இவை கண்டறியப்பட முன்னேடி.

(படம்: ஸ்பான்) —சுப்ரபாலன்



விமலின் முதன்-முதலான முழு-வருட
வொர்ஸ்டட் சூட்டிங் ரகங்கள் தற்சமயம்

**10 வெவ்வேறு உலகத்தர ரகங்களில்!**

டிராபிகால் • சூப்பர் டிராபிகால் • ஆல்டைம்ஸ்
ஆல்டைம்ஸ் பிரீமியம் • பாலிவுல் • பாலிகூல்
வார்ட்வெஸ்ட் • [illegible] • கோர்டுயேட்
எக்ஸ்க்ளூசிவ் சூட்லெங்க்த்ஸ்

'81–ன் வேனிற்
பருவத்துக்காக
500 டிசைன்கள்
மற்றும் வண்ணக்
கலவைகள் —
தங்களுக்காகவே
தயாரிக்கப்பட்டவை!




# நிகரற்ற விமல்

உலகத்தரம் கொண்ட துணி வகைகள்

வீட்டில் அணைத்த விளக்கு —மகரிஷி—

சுகுமாரன் பரமேசுவரனின் மிரட்டலுக்கு மௌனம் சாதித்தான்.

''உன் ஆலோசனைப்படிதான் அந்த டைவர்ஸ் நோட்டீஸில் உன் பெயரைப் பிரஸ்தாபித்திருக்கிறேன்'' என்றான் பரமேசுவரன். நீண்ட நேரம் மௌனமாக இருந்தவன், ''அவனிடம் என்னுடைய வாயரின் நோட்டீஸ் கொஞ்சம் வேலை செய்கிறது. அவகாசம் கொடுத்துப்பார்க்கலாம்'' என்றான்.

அவர்கள் பேசிக் கொண்டே மோட்டார் சைக்கிளுக்கு வந்தார்கள்.

இதைக் கவனித்தபடி இவ்வளவு நேரமும் நின்று கொண்டிருந்த சுமங்களா தன்னை மேலும் மறைத்துக் கொள்ள டெலிபோன் பூத் அருகில் போய் ஒளிந்துகொண்டாள்.

அன்றுதான் அவளுக்கு நேர்முக எழுத்துத் தேர்வு நாள். யூனியன் கமர்ஷியல் ஏஜென்ஸியாரின் நேர்முகப் பேட்டி, பரீட்சை எல்லாம் இருந்தது.

மாடர்ன் டிரை கிளீனர்ஸ் போன்ற இடங்களில்—வேலை செய்து அதில் வரும் சம்பளத்தில் தன் பிரச்னைகளைத் தீர்த்துக் கொள்ள முடியாது என்பது அவளுக்குத் தெரியும். முதலில் காலூன்ற ஓர் இடம்; பிறகு எட்டிப் பிடிக்க வேண்டிய இலக்கை அதில் நின்று கொண்டு பிடிக்க முயற்சி செய்ய வேண்டும்.

அவள் தன்னுடைய வெளி முயற்சிகள் பற்றி யாரிடமும் எதுவும் கூறவில்லை. கோமதிக்கு மட்டும் தெரியும். அவளுடைய சகோதரன் திருமேனிக்கும் தெரியும்.

திருமேனியிடமும் அவரது குடும்பத்திடமும் கோமதி மூலமாக உண்டான நட்பு அவளுக்கு எல்லா வகையிலும் உதவியாக இருந்தது. பரமேஸ்வரனைப் பற்றின எல்லாத் தகவலும் அவளுக்குத் திருமேனி மூலமாகத் தெரிய வந்தது. சட்ட விரோதமான சில நிகழ்ச்சிகளில் அவனை நேரிடையாகப் பிடிக்க முடியாமல் குறுக்கீடுகள் அவரைத் தடுத்தபோது அவனைப் பற்றித் தீவிரமாக விசாரணை செய்து வைத்திருந்தார்.

பழைய மாம்பலத்தில் ஒரு பெண்ணின் தற்கொலையில் அவன் சம்பந்தப்பட்டிருந்தும் அதை உரிய முறையில் வெளியே கொண்டு வர அவரால் முடியவில்லை. அதே போல விஷ மாத்திரைகளைச் சாப்பிட்டுவிட்டுத் தற்கொலைக்கு முயன்ற சாந்தி என்ற பெண்ணை விசாரணை செய்தபோது ஏதோ ஓர் இடத்தில் பரமேஸ்வரனின் பெயர் வந்து பின்பு மறைந்து விட்டது. ''அவர் எங்களுக்கு நிறைய உதவி செய்திருக்கிறார்!'' என்று அந்தப் பெண்ணின் தாயார் கூறிவிட்டாள்.

மயக்கம் தெளிந்த சாந்தி என்கிற அந்தப் பெண்ணும் ''நானாகத்தான் மனக் கவலையால் தூக்கமாத்திரைகளை அதிகம் சாப்பிட்டு விட்டேன்'' என்று கூறி விசாரணைக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டாள்.

இதையும் பேச்சுவாக்கில் சுமங்களாவிடம் திருமேனி சுட்டிக் காட்டியிருந்தார்.

எட்டு மணிக்கே லாண்டிரியின் பக்கம் வந்தான், சுகுமாரன். அவளைப் பார்த்துச் சிரித்தான். அவளும் சிரித்தாள்.

''இன்று ஒரு நாள் லீவு வேண்டும். முக்கியமான வேலை ஒன்று இருக்கிறது. லாயரைப் பார்க்கப் போகிறேன்'' என்றாள், சுமங்களா. அவன் ஆத்திரப்பட வேண்டுமென்பதற்காகவே ஒரு சிறு பொய்.

அவன் அதிகம் குழைந்தவன் போல், ''அவசரப்பட வேண்டாம். நாம் கொஞ்சம் நிதானமாக எதையும் செய்யலாம்'' என்றான்.

''வீடு பற்றி எரிகிறது... வீட்டில் தொங்கும் பூட்டுக்கு நிதானமாகச் சாவியைத் தேடலாம் என்றால்...?''

''நான் அந்த அர்த்தத்தில் சொல்லவில்லை. அவனை ஒரு வழிக்குக் கொண்டு வர வேறு மார்க்கம் இருக்கிறதா என்பதை யோசிப்போமே என்கிறேன்!''

''உனக்கு அவரைத் தெரியாது...!''

''ஆமாம்... ஆமாம்.... தெரியவே தெரியாது....''

''அவருடன் பழகியிருந்தால் இப்படிப் பேசமாட்டாய்!''

''எனக்கு அந்தச் சந்தர்ப்பமே நேரமாட்டேன் என்கிறது. அன்று ஒரு நாள் அசந்தர்ப்பமாகப் பார்த்ததுதான். உன்னுடைய முகத்துக்காகப் பார்க்கிறேன். இல்லையென்றால் நான் நேரில் போய் ரெண்டில ஒண்ணு பார்த்துட்டே வந்துடுவேன். 'யாரைப் பார்த்து என்னடா சொன்னே... ராஸ்கல்!' என்று வெறும் வார்த்தையில் கேட்பதோடு மட்டுமின்றிக் கையாலேயே கேட்டு விடுவேன்.''

''ரொம்பப் பாவமா இருக்கு. உன்னைப் பார்த்தா...! என்னால் உனக்கு எவ்வளவுகெட்ட பெயர்! நீ எவ்வளவு கண்ணியமானவன் என்று எனக்கல்லவா தெரியும்'' என்றாள் சிரித்துக் கொண்டே.

'அயோக்கிய ராஸ்கல்! உனக்கு மேலே எனக்கும் நடிக்கத் தெரியுண்டா! ரெண்டு பேருமாச் சேர்ந்து நாடகமா ஆடறீங்க?'— சுமங்களா மனத்தில் இப்படி கறுவிக்கொண்டே புறப்பட்டாள்.

இயல்பிலேயே சுமங்களாவிடம் அசாத்திய வசீகரம் உண்டு. சாதாரணக் கைத்தறிச் சேலையை உடுத்திக் கொண்டு நின்றாலே தன்னிச்சையாகக் கம்பீரமொன்று கூடிவிடும்.

இப்பொழுதெல்லாம் அவள் தன்னைத் தனி சிரத்தையுடன் அலங்கரித்துக் கொள்வ தில்லை. எல்லா

வற்றிலும் தோன்றிவிட்ட அசிரத்தை போல அதிலும் இருந்தது. ஆனால், இன்று சர்வதேச ரீதியில் இயங்கும் ஒரு பெரிய நிறுவனத்தில் நடக்கும் நேர்முகத் தேர்வில் கலந்து கொள்ளப் போகிறோம் என்பதால் சற்றே அதிக கவனம் செலுத்தித் தன்னை அலங்கரித்துக் கொண்டிருந்தாள். அதில் ஆடம்பரத்துக்குப் பதில் எளிமையும் துல்லியமான அழகும் இருந்தன. துடிப்பும் துருதுருப்பும் மிக்கதொரு பெண்ணின் வெளிப்பாடுகள் இருந்தன.

ஏற்கனவே போதை ஏறிக் கிடந்த சுகுமாரன் அதைக் கண்டு மேலும் மயங்கிப் போனான்.

'இவளை இப்படியே எங்காவது கடத்திக் கொண்டு போய்விட்டால் என்ன? மீறி மீறிப் போனால் அப்படி என்ன தண்டனை கிடைத்துவிடப் போகிறது? போலீஸைத் தாஜா செய்து செக்ஷனை மாற்றிப் போடச் சொன்னால் போயிற்று. இவளுக்காக அக்கறை எடுத்துக் கொண்டு யார் வரப்போகிறார்கள்? பரமேஸ்வரன் சொல்வதுபோல்



இவள் ஓர் அநாதை!'

அவளுடைய வசீகரமான வெளிப்பாடுகளில் தன்னை அப்படியே மறந்து போயிருந்தான் சுகுமாரன்.

'இவளை விட்டுவிடக் கூடாது. இத்தனை நாள் விட்டு வைத்ததே தப்பு. இப்பொழுது சட்ட ரீதியில் இவளை என்னுடன் சம்பந்தப்படுத்த லாயர் மூலம் பரமேஸ்வரன் அனுப்பிய விவாகரத்து நோட்டீஸ் வேறு இருக்கிறது. போலீஸ் விசாரணை என்று வந்தால் கூட

ஒரேயடியாய், ''ஆமாம், இவளை நான்தான் வைத்துக் கொண்டிருக்கிறேன்'' என்று ஒரு பொய்யைச் சொல்லி அதை ஊர்ஜிதம்செய்து விட வேண்டியதுதான். பரமேஸ்வரனும் இதற்கு அனுசரணையாகவே இருப்பான். வக்கீல் நோட்டீசும் இருக்கிறது.'

சுகுமாரனின் உள்ளம் பேராசையால் துடித்தது. அதற்கான திட்டங்களும் போடத் துவங்கினான்.

இச்சைக்குள்ளாகி, உணர்ச்சிகளின் கோரப் பிடியில் அவன் உஷ்ணப்பட்டு நிற்கையிலேயே அவள் தூரப் போய்க் கொண்டிருந்தாள்.

சென்னை சுதர்ஸன் இண்டர் நேஷனல் மல்டி ஸ்டோர் பில்டிங்கில் ஐந்தாவது மாடியில் யூனியன் கமர்ஷியல் ஏஜென்சீஸ் கம்பெனிக்கான பரீட்சைகள் நடந்தன.

காலை மணி பத்துக்குத் தேர்வு நடக்கப் போகும் ஹாலின் பாதிக் கதவு திறக்கப்பட்டது.

பத்து முப்பதுக்குக் கதவு மூடப்பட்ட போது மிகப் பெரிய ஹாலில் இடங்கொள்ளாமல் பட்டதாரிகள் உட்கார்ந்திருந்தார்கள்.

இரண்டு மணி நேர அவகாசத்துக்கான கேள்வித்தாள் ஒன்று தரப்பட்டது.

எல்லாமே கோடிட்ட இடத்தைப் பூர்த்தி செய்வதும், ஆமாம்...இல்லை...இதில் எது சரி... சரியில்லை என்று இப்படித் தேர்வு செய்து குறிக்க வேண்டியதாகவே இருந்தன. கடைசியில் பத்தே வரிகளில் ஒரு கட்டுரை. அதற்கான நான்கு குறிப்புக்கள்.

கேள்விகளைப் படித்துப் பதிலைத் தயார் செய்துகொள்ள அரை மணி நேரம்.

பதினொரு மணிக்கு ஒரு சிறு மணியோசை. ''பதில் எழுத ஆரம்பிக்கலாம்'' என்ற அறிவிப்பு.

ஒரு மணிக்கு மீண்டும் ஒரு மணி ஓசை.

''பதில் எழுதுவதுநிறுத்தப்பட வேண்டும்''

பேப்பர்கள் கைமாறின.

எல்லோரும் வெளியே வராந்தாவில் உட்கார்ந்து கொண்டும், நடை பாதையில் நின்று கொண்டும் இருந்தார்கள்.

பிற்பகல் பரீக்ஷை ஹாலைத் திறந்து கொண்டு வெளியே வந்த நிர்வாகி யொருவர் கையில் சிறு காகிதத்தை வைத்துக்கொண்டு இருபதுபெயர்களை மட்டுமே வாசித்தார்.

அந்த இருபது பேர்களைத் தவிர மற்றவர்கள் போகலாம் என்று கூறிவிட்டார். கூட்டம் சலசலப்புடன் கலைந்து, பின் கரைந்து, சுருங்கி இருநூறு இருபதாகி நின்றது. அதில் சுமங்களாவும் ஒருத்தி.

தேர்வுக் குழுவின் முன் நேரிடைப் பேட்டிக்காக அவள் போய் உட்கார்ந்த போது, அவளுடைய வசீகரமான தோற்றம் மிகத் தெளிவான, திறமையான ஆங்கிலப் பரிச்சயம்....

தேர்வுக் குழுவினரின் திருப்தியை எடுத்த எடுப்பிலேயே சுமங்களா பெற்று விட்டாள். அவள் தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டாள்.

சென்னையில் உள்ள தலைமைக் காரியாலயத்தில் வேலை. அதற்கு முன் லக்னோவில் உள்ள அவர்களின் வட மாநிலங்களுக்கான தலைமைக் காரியாலயத்தில் ஆறு மாத காலப் பயிற்சி.

சம்பளம் எடுத்த எடுப்பிலேயே ஆயிரத்து ஐநூறு.

யூனியன் கமர்ஷியல் கம்பெனியின் நிர்வாக அதிகாரி கொடுத்த அந்த ஆர்டரை அவள் பெற்றுக் கொள்ளும்போது மகிழ்ச்சியில் கரம் நடுங்கியது. இம்மாதிரி வேலையும் தனக்குக் கிடைக்குமா என்று ஏங்கிக் கொண்டிருந்தவள், அவள். அநாதரவான இந்த உலகில் தான் காலூன்ற ஒரு வழி பிறக்காதா என்று தவித்துக் கொண்டிருந்தவள். அவளுடைய எல்லாப் பிரச்னைகளுக்கும் முற்றுப் புள்ளி வைத்துவிடலாம்.

ஒரு தூர்த்தனை நம்பி மோசம் போய் விட்டதை விபத்து போல் எண்ணித் தூரத்தில் போய்விடலாம்.

வாழ்க்கையில் நடந்துவிட்ட அந்த நிகழ்ச்சியை மறந்துவிடலாம்.

செய்கடனுக்காக, அருணாசலம், பார்வதம் தம்பதிகளுக்கு உதவியைத் திருப்பிச் செய்து விடலாம்.

இனி தன் வாழ்க்கையைத் தானே அமைத்துக்கொள்ளலாம். அந்த வாழ்க்கையைத் திட்டமிட்ட வாழ்க்கையாக அமைத்துக் கொள்ளலாம்.

காலார நடக்கவேண்டும் போல இருந்தது. வெய்யிலையும் பொருட்படுத்தாமல் நடைபாதை நிழலில் மெதுவாக நடந்தாள்.

பிள்ளையார் கோயிலின் நடை சாத்தியிருந்தாலும் உள்ளே சிறு விளக்கு எரிந்துகொண்டிருந்தது. கண்களில் கண்ணீர் மல்க அந்தக் கோயிலின் முன் சற்று நேரம் கரம் குவித்து நின்றாள்.

சற்று முன் பெற்றுக் கொண்ட ஆர்டரைச் சந்நிதியில் வைத்துப் பின்பு எடுத்துக்கொண்டாள்.

'முறையான ஆர்டர் உங்களுக்கு இன்னும் ஒரு வாரத்தில் எங்கள் எம். டி. விஸ்வேஸ்வரன் அவர்கள் கையெழுத்திட்டு வரும்' என்று புன்முறுவலுடன் கூறிய அக்கம்பெனி நிர்வாகி அந்த முன்னறிவிப்பு ஆர்டரை அவளிடம் அங்கேயே டைப் அடித்து நீட்டினார்.

'நீங்கள் யூனியன் கமர்ஷியல் ஏஜென்சீஸ் நடத்திய எழுத்து மற்றும் நேர்முகப் போட்டியில் வெற்றி பெற்றுத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறீர்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.



''அவர் புதிதாகப் பத்திரிகை ஆரம்பிக்கப் போகிறாரே ஏன்?''
''அவருடைய துணுக்குகளையும் கதைகளையும் யாரும் போடுவதில்லையாம் அதனால்!''
- பிரியா பாலு

MOD 11 CP-S

# அகிலன் மனம் அறிவீர்களா? பரிசு ரூபாய் 500/-

இந்த வாரக் கல்கியில் இடம்பெறும் நான்கு சிறுகதைகளையும் படித்துவிட்டு அவற்றில் தமக்கு மிகச் சிறந்ததாகத் தோன்றும் பத்து வரிகளுக்கு மேற்படாத ஒரு பகுதியை அகிலன் தேர்ந்தெடுத்திருக்கிறார்.

நீங்களும் அதே வரிகளை ஒரு போஸ்ட் கார்டில் எழுதி அனுப்பிவிட்டால் உங்களுக்கு ரூ. 500 பரிசு! ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதினால் பரிசுத் தொகை பகிர்ந்து அளிக்கப்படும்.

**முடிவு தேதி ஏப்ரல் 6.**

தபால் கார்டின் தலைப்பில் "அகிலன் மனம் அறிவேன்!" என்று குறிப்பிட வேண்டும்.



---

முறையான உத்தரவுகள் இன்னும் ஒரு வாரத்தில் உங்களுக்கு அனுப்பப்படும். அப்பொழுது பணியில்சேர்ந்துகொள்ளலாம்."

சந்நிதியில் வைத்திருந்த ஆர்டரை எடுத்துக் கண்ணில் ஒத்தி, பையில் போட்டுக் கொண்டாள்.

பரீட்சை எழுதும்போது இருந்த பசி இப்பொழுது எங்கே போனதென்றுதெரியவில்லை. நேராகக் கல்லூரிக்குப் போய் கோமதியிடம் சொல்லிவிட்டு வந்தால் என்ன? பிற்பகல் அவள் அறைக்கு வரமாட்டாளே.

அவளுக்கு வேலை கிடைக்க வேண்டும் என்று இடையறாது பாடுபட்டவள் கோமதி.

தினசரி பேப்பர்களைப் பார்ப்பதும், அதில் உள்ள வாண்டட் காலங்களைக் கவனித்துச் சொல்வதும்....

ஏன் இந்த யூனியன் கமர்ஷியல் ஏஜன்சீஸ் விளம்பரத்தைக் கூடப் பார்த்துச் சொன்னவள் அவள்தானே!

"எனக்கு அதிர்ஷ்டமே இல்லை கோமதி. எழுதிக் கொடு. கையெழுத்துப் போட்டுத் தருகிறேன். நீயே தபால் பெட்டியில் உன் கையாலேயே போட்டுவிடு" என்று கூறி அந்தத் தபாலைக் கூட அவள் கையால்தான் போட வைத்தாள்.

"சுமங்களா, உனக்கு வேலை கிடைத்தவுடன் முதல் மாதச் சம்பளத்தில் சேலம் சென்ன கிருஷ்ணபுரம் வரசித்தி விநாயகருக்கு ஒரு அபிஷேகம் செய்யறதா வேண்டிக்கொண்டிருக்கிறேன். ஏனென்றால் எனக்கு ரொம்பச் சக்தி வாய்ந்த பிள்ளையார் அவர். படிச்சுட்டு வேலையில்லாமல் மனம் புழுங்கிக் கொண்டிருந்தேன். என் தோழி சகுந்தலா சேலத்தில் இருக்கா. 'ஒரு தடவை சேலத்துக்கு வந்து என்னுடன் ஒரு வாரம் இருந்துட்டுப் போயேன்'னு. நானும் போயிருந்தேன். மத்தியதர வகுப்பினர் வசிக்கும் எக்ஸ்டென்ஷன் பகுதி அது. அப்பகுதியில் ஒரு சின்னப் பிள்ளையார் கோயில். என்னமோ அந்தப் பிள்ளையாரைப் பார்த்தவுடன் இப்படி வேண்டிக்கொள்ள வேண்டும் போல் இருந்தது. 'வேலை கிடைத்தால் முதல் மாத சம்பளத்தில் உனக்கொரு அபிஷேகம் விமரிசையாகச் செய்கிறேன்' என்று வேண்டிக் கொண்டேன். ஒரு வாரம் இருந்துவிட்டுத் திரும்பலாம் என்று அங்கே சென்றிருந்த என்னை நான்கு நாளில் அங்கிருந்து புறப்படும்படியாகச் செய்துவிட்டார் அவர். அவர் எவ்வளவு சக்தி வாய்ந்தவர்! இன்று உனக்காக வேண்டிக்கொண்டுதான் இந்த அப்ளிகேஷனைத் தபாலில் சேர்த்தேன்."

சுமங்களாவுக்கு அந்தச் சொற்கள் நினைவுக்கு வந்தன.

உலகில் இறைவன் மனிதனின் முதல் தேவையான காற்று, தண்ணீர், உணவுக்கு முதல் வசதி செய்த பிறகுதான் மற்ற வசதிகளை அவரவர் பூர்வ ஜன்ம புண்ணியத்தின் படி அளிக்கிறான்.

சிலபேருக்குப் பிறப்பிலேயே ஊனம் வைத்து விடுகிறான். மனிதனுக்கு ஆயிரம் அபிலாஷைகள் இருந்தாலும் நிறைவேறுவதென்னவோ ஒருசிலதான்.

வாழ்வில் பிறவியிலேயே அநாதை என்கிற பட்டத்தை, தாய் தந்தையரை இழந்து ஒரு ஊனமாகப் பெற்றுவிட்டவள் சுமங்களா. அறியாப் பருவத்தில் அவளது அபிலாஷைகள் ஒரு மண் பொம்மையை அல்லது பிளாஸ்டிக் ரயிலை வைத்துக் கொண்டு விளையாடுவதன் மூலம் சமனப்பட்டுப் போயிருக்கலாம்.

ஆனால் வாழ்வின் பரிணாமத்தின் உந்துதல்கள் ஓர் இளம் பெண்ணைக் குடும்ப பந்தத்தை நோக்கித் திசை திருப்பும்போது அந்த அபிலாஷை கட்டாயம் நிறைவேறத் தக்க ஒன்று. குடும்பம் பொம்மை விளையாட்டல்ல! அதைக்கூட இறைவன், பூர்வ புண்ணியத்தைப் பொறுத்துத்தான் நிர்மாணித்துள்ளான் என்பதுஅவளைப் பொறுத்தவரை உறுதிப்பாடு ஆகிவிட்ட பின் அவளது சிறு அபிலாஷையான தன்னிச்சை வாழ்வுக்கு ஏற்ற வழியொன்றை அந்த வரசித்தி விநாயகர் அளித்துவிட்டதற்காக இப்போது இங்கிருந்தே சேலம் நகர் நோக்கி மனத்தால் கும்பிட்டாள்.

'அவளையும் அழைத்துக் கொண்டு ஒரு தடவை சேலம் போய்விட்டு வந்துவிட வேண்டியதுதான். அருள்பாலித்த சேலம் சென்ன கிருஷ்ணபுரத்துப் பிள்ளையாரைப் பார்த்துவிட்டு வந்துவிட வேண்டும்.'

நேராக அறைக்கு வந்தாள். கல்லூரிக்கே சென்று கோமதியைக் காண வேண்டும் என்ற எண்ணத்தைக் கைவிட்டு விட்டுத் திரும்பியிருந்தாள்.

மாலையில் வர இருக்கும் கோமதிக்காகக் காத்துக் கொண்டிருந்தாள். (தொடரும்)

# சந்திரனே சாட்சி!



ராஜேஷ்குமார்

ரீங் தியேட்டரில் சினிமா முடிந்ததும் முதல் ஆளாக வெளியே வந்தாள் கன்னியம்மா.

சினிமா பார்க்கிறவரை இருந்த சந்தோஷம், உற்சாகம், அரிப்பு — இப்போது அவளை விட்டு விலகி — அவைகளுக்குப் பதிலாக பயம், படபடப்பு, இனம் புரியாத திகில் அவளைக் கப்பிக் கொண்டது.

கன்னியம்மா முகத்தில் வியர்வை பொங்க விறுவிறுப்பாக நடந்தாள். பாழும் தியேட்டரில் கரெண்ட் மட்டும் 'கட்'டாகாமல் இருந்திருந்தால் இந்நேரம் வீட்டுக்குப் போயிருக்கலாம். மில்லிலிருந்து ஷிப்ட் முடிந்து அவர் வீட்டுக்குத் திரும்பறதுக்கு முன்னாடியே வீட்டிலே உட்கார்ந்திருக்கலாம். இனிமேல் அவருக்குத் தெரியாமல் இப்படித் தனியாக சினிமாவுக்கு வரக்கூடாது. நேரம் என்ன இருக்கும்? பத்தரை இருக்குமா?

மனத்தில் எண்ணங்கள் அலை பாய வேகமாய் நடந்தாள்.

கழுத்தில் இருந்த இரட்டை வடச் சங்கிலி வெளியே தெரியாமல் இருக்க, சேலைத் தலைப்பால் கழுத்தைப் போர்த்திக் கொண்டாள்.

திரும்பிப் பார்த்தாள்.

ஐம்பது கெஜ தூரத்துக்குப் பின்னாடி— சினிமாக் கும்பல் வந்து கொண்டிருந்தது. துணைக்குக் கும்பலை எதிர்பார்த்தால் வீடு போய்ச் சேரப் பதினொரு மணியாகிவிடும்... நடையை எட்டிப் போட வேண்டியது தான்.

போட்டாள்.

ஊரை இரண்டாகப் பிரித்த அந்தச் சவுக்குத் தோப்பு வந்தது.

ஒரு விநாடி நின்றாள் கன்னியம்மா.

சவுக்குத் தோப்பைச் சுற்றிக் கொண்டு போவதை விட குறுக்கே புகுந்து போனால் பதினைஞ்சு நிமிஷத்தில் வீடு போய்ச் சேர்ந்து விடலாமே! இந்நேரத்துக்கு என்ன பயம்!

கிழக்குத் திசையில் காரட் நிறத்தில் உதய மாகியிருந்த பௌர்ணமிச் சந்திரன் நானிருக்கேன் வழிகாட்ட! வா! என்று அழைக்க—

கன்னியம்மாள் துணிந்து சவுக்குத் தோப்பினுள் நுழைந்தாள்.

'ரொய்ங்...ரொய்ங்...' என்று சுவர்க் கோழிகள் பின்னணி பாட — ஊசி ஊசியான இலைகளைக் காற்றில் அலைந்தபடி கரும் பூதங்களாய் நின்றிருந்த சவுக்கு மரங்களினூடே நூலிழையாய்ப் போய்க் கொண்டிருந்த அந்த ஒற்றையடிப் பாதையில் நடந்தாள்.

'சர்ர்ர்ரக்... சர்ர்ரக்....' — அவள் காலடி பட்டுக் காய்ந்த சருகுகள் ஓலமிடப் பயந்து கொண்டே நடந்தாள் கன்னியம்மாள்.

பூர்ணச் சந்திரன் பனிச்சென்று மேலேறும் பியிருந்தான்.

கன்னியம்மாள் ஏறக் குறைய — சவுக்குத் தோப்பின் மத்திக்குவந்துவிட்டிருந்த அந்த விநாடிகளில்தான்.....

அவர்கள் எதிர்ப்பட்டார்கள். கையில் பிச்சுவா மின்னச் சிரித்தார்கள்.

''ஏய்... நில்லு... எங்க போயிட்டு வர்றே?''

''சினிமாவுக்குங்க...'' — குரல் நடுங்கியது கன்னியம்மாளுக்கு.

''சினிமாவுக்குப் போயிட்டு ஒத்தையா... தைரியமா இந்த வழியில வர்றியே பயமாயில்லே....?''

''வீட்டுக்கு அவசரமாப் போகணுங்க... அதனாலத்தான்....''

''அப்படியா... அப்படின்னா ஒண்ணு செய்! கழுத்தில போட்டிருக்கிற செயினையும் கையில இருக்கிற வளையல்களையும், மூக்கில மின்னுற மூக்குத்தியையும், காதில ஜொலிக்கிற கம்மலையும் கழற்றி

எங்கையிலே குடுத்துட்டுச் சீக்கிரமா வீடு போய்ச் சேர்.... ம்....''

கன்னியம்மாள் மிரண்டாள். இரண்டு எட்டு பின்வாங்கி ஓட முற்பட்டாள். ஒருவன் சரேலெனப் பாய்ந்து அவளுடைய தலை முடியைப் பற்றினான்.

''ஓட நினைச்சே... ஒடம்பு பூரா ரத்த விளாரியாயிடும்... ஒடம்புல இருக்கிற துணியையும் உருவிக்கிட்டு அம்மணமா வூடு போய்ச் சேர்ற நிலைமை வந்துடும்... மரியாதையாக் கழட்டு.... ம்....'' — ஒருவன் அவளுடைய சேலைத் தலைப்பைப் பற்ற...

கதறினாள் கன்னியம்மாள். ''தந்துடறேன்... பூரா நகையையும் தந்துடறேன்... என்னை ஒண்ணும் செஞ்சிடாதிங்க....''

நகைகளைக் கழற்ற ஆரம்பித்தாள்.

''ம்.... சீக்கிரம்...''

உடம்பில் ஒரு நகைத் துணுக்கு பாக்கியில்லாமல் அத்தனையையும் கழற்றி அவன் கையில் போட்டாள் கன்னியம்மாள்.

''சபாஷ்!'' — அவளுடைய தோளைத் தட்டினான் ஒருத்தன். ''குட்டிகூட நல்லாத்தான் இருக்கா மெத்துன்னு... கை வெப்பமா முருகேசு?''

கன்னியம்மாளின் மேல் கழுகாய்ப் பாய்ந்தார்கள்.

கிழக்குத் திசையில் பிரகாசித்துக் கொண்டிருந்த பூர்ணச் சந்திரன் பார்வையில் சிக்கினான். விழிகள் நிலைகுத்த அதையே வெறித்தாள்.

''என்னடி சந்திரனையே பார்க்கிறே?... அந்த நிலா காப்பாத்த வருமா? இல்லே சாட்சி சொல்ல வருமா? முரண்டு பிடிக்காம எங்க கூடச் சந்தோஷமா இருந்துட்டு வூடு போய்ச் சேர்....'' — கன்னியம்மாளைச் சூறையாட ஆரம்பித்தார்கள்.

கன்னியம்மாள் திமிறினாள்... உதறினாள்.. கடித்தாள்.

''ஸ்...ஸ்...ஸ்...ஸ்...'' — வலியால் துடித்த அவன் ஆத்திரம் பொங்க, பிச்சுவாவை உருவிக் கன்னியம்மாளின் அடி வயிற்றில் செருகி இழுத்தான்.

''அம்...மா...ஆ....!''

கன்னியம்மாளின் அலறல் சவுக்குத் தோப்பு இரண்டாய்க் கிழிபட்டது. சரிந்தாள். வயிறு ரத்தச் சகதியாய் மாறத் துடித்தாள். நிமிஷங்களில் துடிப்பு அடங்க—



வெறித்தாள் — அவனுடைய திறந்த விழிகள் — நிலைகுத்தியபடி—

பௌர்ணமிச் சந்திரனை வெறித்தன.

''....டேய்...முருகேச... வாடா ஓடிடலாம்...''

இருவரும் ஓடினார்கள்.

கன்னியம்மாவின் வெற்றுப் பார்வை சந்திரனைக் கேட்டது.

''உன் கண் முன்னாடி நடந்த இந்த அக்கிரமத்துக்கு நீ ஒருத்தன்தான் சாட்சி... என்னை நாசப்படுத்தினவங்களை நீ தண்டிக்காமே இருக்கலாமா...?''

லாட்ஜ் ஒன்றின் அறை.

முருகேசனும், ராக்கப்பனும் சந்தோஷத்தில் மிதந்தார்கள்.

''சுத்தமாப் பதினைஞ்சு பவுனாவது தேறும் இல்லையா ராக்கப்பா...?''

முருகேசன் கேட்க ராக்கப்பன் தலையாட்டினான். ''தாராளமாகத் தேறும்... ஆளுக்கு ஏழரைப் பவுன்....''

ஜன்னல் வழியே முழுச் சந்திரன் பொன்னிறமாய்ப் பிரகாசிக்க — அதைச் சுட்டிக் காட்டியபடி முருகேசன் சொன்னான்:''இந்தத் திருட்டிலே அந்தச் சந்திரனுக்கும் பங்கு உண்டு....அவனும் பார்த்துக்கிட்டிருந்தான். அவனுக்கும் குடுத்திடலாம்....''

ராக்கப்பன் கெக்கலிட்டுச் சிரித்தான்... ''இந்தத் திருட்டு நகைல அந்த சந்திரனுக்குப் பங்கு வேணும்னு நீ சொன்னா நாம செஞ்ச கொலையிலேயும் அவனுக்குப் பங்கு இருக்கு. அதையும்தான் அவன் பார்த்துக்கிட்டிருந்தான்...''

''ராக்கப்பா... நீ ஒரு விஷயத்தைக் கவனிச்சியா? அந்தப் பொண்ணு கிட்ட நாம நகையைப் பிடுங்கிறபோதும் சரி...அவளைக் குத்திக் கொலை செஞ்ச போதும் சரி... அந்தப் பொண்ணு சந்திரனையே பார்த்திட்டிருந்தா! என்னமோ அந்தசந்திரனே ஓடிவந்துகாப்பாத்தப் போற மாதிரி... சுத்தப் பைத்தியம்!''

இருவரும் சிரித்தார்கள் கெக்கலிட்டு.

அறைக்கதவு வேகமாய்த்தட்டப்பட்டது.

''ரூம் பாயா இருக்கும்.... சரக்கு வாங்கிட்டு வந்திருப்பான். போய்த் திற ராக்கப்பா...''

ராக்கப்பன் போய்த் திறந்தான்.

நல்ல உயரத்தில் — கட்டுமஸ்தான உடம்போடு — நறுக்கு மீசையோடு ஒருவர் நின்றிருந்தார். கையில் பிஸ்டல்.

இறுகிப்போன குரலில் சொன்னார்: ''நான் பி-2 போலீஸ் ஸ்டேஷன் சப்-இன்ஸ்பெக்டர். பக்கத்து அறையிலேதான் தங்கியிருக்கேன். கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி நீங்க ரெண்டு பேரும் பேசின பேச்சைக் கேட்டேன். உங்க வாயாலே ஒரு கொலை நடந்ததை ஒத்துக்கிட்டிருக்கீங்க... பேசாம சுவரோரமா மண்டி போட்டு அப்படியே உக்காருங்க. போலீஸுக்குப் போன் பண்ணியிருக்கேன். ஜீப் வரும்.''

முருகேசனும் ராக்கப்பனும் திகைத்துப் போய் நிற்க—

சொன்னபடியே போலீஸ் ஜீப் வந்தது.

ஜீப்பினின்றும் ஆர்வமாய்க் குதித்து இறங்கிய இன்ஸ்பெக்டர் கோகுல்நாத்— கையில் பிஸ்டலோடு நின்றிருந்த சப் இன்ஸ்பெக்டரை நெருங்கினார்.

''வெல்டன் மிஸ்டர் சந்திரன்! கள்ளத்தனமா கஞ்சா விற்பனை செய்யற இந்த ஹோட்டலைக் கண்காணிக்க வந்த நீங்க— ஒரு கொலைக் கேஸையும் பிடிச்சிருக்கீங்க... கங்கிராட்ஸ்!''

சப்-இன்ஸ்பெக்டர் சந்திரன் புன்னகை பூத்தார்.

''தாங்க்யூ ஸார்!''



''திருவள்ளுவரின் மனைவி பெயர் என்னனு பரீட்சையில் கேட்டிருந்த கேள்விக்கு எவ்வளவோ யோசித்தும் விடை நினைவுக்கு வராததால் கடைசியில்...

''என்ன எழுதிட்டு வந்தே..?''

''மிஸஸ் வள்ளுவர்னு!''

-உ. ராஜாஜி

## நம்மைப் போலவே....

மலேயாக் காரர்கள் குழந்தைக்கு மொட்டை அடிப்பார்கள். பிறந்ததும் ஏழு துணிகளை ஒன்றன் மேல் ஒன்றாக அடுக்கி அதன் மீது குழந்தையைப் படுக்க வைப்பார்கள். பின் ஒவ்வொரு நாளும் ஒரு துணியாக எடுப்பார்கள். ஏழாம் நாள் குழந்தைக்கு மொட்டையடித்துப் பெயர் சூட்டுவார்கள்.

மலேயாக் காரர்கள் திருமணத்தின் போது மணமக்கள் மீது அரிசி (அட்சதை) தூவுவதும் குறிப்பிடத் தக்கது.

சீனர்கள் தங்களின் குடும்பத்தில் உள்ளவர்கள் இறந்துபட்டதும் அவர்கள் வேறு ஒரு உலகில் வாழ்வதாகநினைத்து, திவசம் கொடுக்கின்றனர்.

-பி. நாராயணன்






## 18. அமாவாசையா பௌர்ணமியா?

ஒரே மாதிரிக் கதையைத் திரும்பத்திரும்ப விவரிப்பானேன்? போன பக்கமெல்லாம் உதைபடும் பந்து போல, அவன் புகை மண்டலத்துக்குள்ளேயே உலாவியபோது அவனுக்கு ஆறுதல் கூறியவர்கள் அன்றுடம் வந்து போன பெண்கள்தான்.

துன்பப்பட்டவர்கள் இரண்டு பேர் சந்திக்கும்போதுதான், இரண்டு பேருக்கும் ஆறுதல் கிடைக்கிறது. இரண்டு நோயாளிகள் பேசிக்கொண்டால்தான் ஒருவர் வேதனையை ஒருவர் உணர முடியும்.

ஆரோக்கியமான ஒருவனிடம் போய் ஒருவன் நோய் பற்றிப் பேசினால், அவன் எப்போது எழுந்து போவான் என்று தோன்றும்.

அவனது வாழ்க்கையில் வந்து போன பெண்கள் எல்லாம் அல்லற்பட்டு, ஆற்றாது அதே நிலையில் வந்தவர்கள்தான்.

அவர்களை, 'விபசாரிகள்' என்று குற்றம் சாட்டிப் போலீஸார் கைது செய்வார்கள்.

எந்த மடையனுக்கு அவர்களுடையதுயரம் நிறைந்த வரலாறு தெரியும்?

காமத்தை வெறியாட்டமாக அவர்கள் கருதியதில்லை, மற்றவர்களின் சூட்டைத் தணித்துத் தங்களின் பசியைத் தணித்துக் கொள்ளும் அந்தப் பரிதாபத்துக்குரிய பிராணிகள் மீது அவனுக்கு எப்போதும் அனுதாபம் உண்டு.

அவர்களில் சிலர் ஒரு காலத்தில் புகழ் பெறுவதுண்டு. புகழ் பெற்ற பிறகு அவர்களைச் சந்திப்பதில்அவனுக்கு அக்கறை இல்லை.

'கஷ்ட காலத்தில் அவன் கைகொடுத்த ஒரு பெண்தான் அன்று வந்திருந்தவள்.

ஒரு பெண்ணைப் பக்கத்தில் உட்கார வைத்துக்கொண்டு ஒரு மனிதன் வேறுபட்ட வேதனைகளை எண்ணிக் கொண்டிருப்பானா? அவன் வாழ்வில் அது சாதாரணம்!

பெரும்பாலும் அப்படிப்பட்ட ஓர் ஊமை இரவுதான் அன்றைய இரவும்!

அவனுக்குக் கூட இருந்தவளின் அழகு தெரியவில்லை; காமராஜரின் பெருமையே அதிகமாக இருந்தது.

'வழி நெடுகிலும் எப்படித் தப்பான காலடிச் சுவடுகளையே பதித்திருக்கிறோம்' என்று அவன் எண்ணி எண்ணி நொந்தான்.

முன்பு சில நேரங்களில் நடந்த நிகழ்ச்சிகள் தொடர்ந்து நினைவுக்கு வந்தன.

லால் பகதூர் சென்னைக்கு வந்தபோது ஆபட்ஸ்பரியில் நடந்த கூட்டத்தில் அவனது புத்தகத்தை, 'அவர் வெளியிடுவார்' என்று, நண்பர் சின்ன அண்ணாமலை விளம்பரப் படுத்தி விட்டார்.

உடனே காமராஜர் சின்ன அண்ணாமலையைக்கூப்பிட்டுக் கடுமையாகப் பேசிவிட்டார். அதில் சின்ன அண்ணாமலைக்கே கூட எரிச்சல் வந்துவிட்டது. அவனும் கூடத்தான் சின்ன அண்ணாமலையைக் கோபித்துக் கொண்டான்.

"தன்னைத் தவிர இன்னொருவர் சென்னையில் இருப்பதாகத் தெரியக் கூடாது என்று

"படுத்துக்கொண்டே ஜெயிப்பேன்னேன்!"



காமராஜர் விரும்புவார். நாம் ஆடபட்ஸ் பரி நிகழ்ச்சிக்கே போக வேண்டாம்'' என்று கூறிவிட்டான் அவன்.

சிறிது நேரத்தில் காமராஜர் அவனைக் கூப்பிட்டு, ''நீ உன் புத்தகத்தை லால்,பக தூரிடம் கொடு'' என்றார்.

'அதாவது வெளியிடுகிற மாதிரி வேண் டாமாம்!'

அது போலவே இரண்டொரு பொதுக் கூட்டங்களில் அவன் பேசுவதற்கு முன்னால் காமராஜர் எழுந்து பேசிவிடுவார்.

சம்பத்துக்கும் அவனுக்கும் தகராறு வந்த போது இரண்டு பக்கமும் தட்டிக் கொடுத்து இரண்டு சேவலையும் சண்டைக்குத் தயா ராக்குவார்.

சிறிய நிகழ்ச்சிகளைப் பெரிது படுத்த அவன் விரும்பவில்லை. அவையெல்லாம் 'காமராஜ ரின் சுபாவங்கள்' என்று ஒதுக்கினான். ஆனால் மிஷின் வழக்கில் அவர் நடந்து கொண்ட முறையிலிருந்து எந்தத் தொண்டனும் அவ ரிடம் தாக்குப் பிடிக்காமல் போன காரணம் புரிந்தது.

அவனது மௌனத்தைக் கண்ட காமராஜர் டெலிபோன் செய்து அவனைக் கூப்பிட்டார்.

''இந்தத் தண்டனையை யெல்லாம் பத்து நாளில் மறந்துவிடுவார்கள் பொதுஜனங்கள். நீ பேசாமல் கூட்டத்துக்குப் போ!'' என்றார், அவர்.

இந்த ஆறுதல் அந்தக் கோமாளிக்குப் போதாதா! அவன் மீண்டும் நுகத்தடியில் ஏறி உட்கார்ந்தான்.

மறுபடியும் ஆரவாரம்; ஆர்ப்பாட்டம்; பேரணிகள், பெரும் கூட்டங்கள்!

விவஸ்தையற்ற தன் வாழ்க்கைக்கு அவன் ஒரு நியமமும் கற்பிக்க முடியாது. ஏதே னும் ஒரு பாதையில் அவன் ஒழுங்காக நின் றிருந்தால் இவ்வளவு பெரிய வரலாறு இல் லாமல் போயிருக்குமே தவிர, வாழ்க்கை அமைதியாக இருந்திருக்கும்.

1966ம் ஆண்டு முழுக்க அவன் பாட்டு எழுதினான். கூட்டத்திற்குப் போனான். மது அருந்தினான்; மயங்கினான்; அவ்வளவுதான்!

இந்தப் பிரக்ஞை இல்லாத ஊசலாட்டத் திற்குப் பெரிய தத்துவார்த்தங்கள் எதற்கு?

தான் போகுமிடங்களில் சந்தித்த கூட் டங்கள் பிரமாண்டமாக— இருந்தமையால்.

1967 தேர்தலில் காங்கிரஸ் வெல்லப்போவது உறுதி என்றும், தி. மு. க. அதிகம் ஒரு 20 சீட்டுக்கள் — மொத்தம் 70 இடங்களைப் பெறும் என்று அவன் நம்பினான்.

அந்த ஒரு தேர்தலில்தான் அவன் போட்ட கணக்கெல்லாம் பொய்க் கணக்காயிற்று. 1967 பொதுத் தேர்தலில் மேடைகளில் அவன் ஆடிய ஆட்டம் கொஞ்ச நஞ்சமல்ல.

'பேய் பிடித்தவன் பேயை விட வேகமாக ஆடுவான்' என்பார்கள். அவன் அதைவிட வும் வேகமாக ஆடினான்.

தாங்களாகவே பார்த்துக் கொண்டபோது தி. மு. க.வை விட அதிகமான பேச்சாளர் களும், எழுத்தாளர்களும் தங்களுக்கே இருப் பதாக அவர்களுக்கும், நண்பர்களுக்கும் தோன்றிற்று.

அந்த மயக்கம் காமராஜரையும் பற்றிற்று. அதனால் அவரும் நிதானம் தவறி, ''நான் படுத்துக்கொண்டே ஜெயிப்பேன்'' என்று கூறிவிட்டார்.

1967 தமிழகத்து தேசிய இயக்கத்துக்குப் பெரும் சோதனை ஏற்பட்ட ஆண்டு.

இப்படி ஒரு சோதனைக்கு முன்னோடியாகத் தானோ என்னவோ 1967ல் காமராஜர் ஏறிச் சென்ற விமானம் தீப்பிடித்தது. கார் விபத்தில் அவருக்கு முழங்காலில் காயம் ஏற்பட்டது. அதற்கு முன்னால் டெல்லியில் அவரது வீடு விரோதிகளால் கொளுத்தப் பட்டது!

பொதுத் தேர்தலின்போது பெரும்பா லான காங்கிரஸ்காரர்கள் நன்றாகச் சம் பாதித்தார்கள். அவனோ கைப்பணத்தைச் செலவழித்து மலர் வெளியிட்டான். அந்த மலரைக் காங்கிரஸ்காரர்களே வாங்கவில்லை.

சிவகாசி அய்யா நாடார் 200 மலர் அனுப் பச் சொல்லி, அனைத்தையும் அப்படியே திருப்பி அனுப்பி விட்டார். இத்தனைக்கும் அவர்தான் காமராஜருக்கு மிக நெருக்கமான பெரிய மனிதர்.

பொதுத் தேர்தலில் பெரும் சுற்றுப் பய ணம் நடத்திவிட்டு வோட்டுக்கள் எண்ணப் படுவதற்கு முதல் நாள், அவன் காமராஜ ரைச் சந்தித்தான்.

காமராஜர் போலீஸ் இலாகாவில் தேர் தல் பற்றிய கணிப்பைக் கேட்டுக் கொண் டிருந்தார்.

நமது போலீஸார் ''காங்கிரஸ் 140 இடங்களைப் பெறும்!'' என்று உறுதியாகச் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

தேர்தல் முடிவுகள் வெளிவரும் அன்று, அவன் அதிகாலையில் குளித்துவிட்டு, மௌப ரீஸ் ரோட்டில் நடிகை பத்மினியின் வீட் டுக்கு எதிர்த்தாற்போலிருந்த மேட்டுப்பாளை யம் ராயப்பக் கவுண்டர் வீட்டுக்குப் போனான்.

அப்போது அந்த வீட்டில் யாரும் குடி யிருக்கவில்லை. ஒரு பாட்டில் பீர், ஒரு பாட் டில் விஸ்கியோடு அங்கிருந்த இரண்டு டெலி போன்களையும் எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தான்.

காலை பதினோரு மணிக்கு முதல் தேர்தல் அறிவிப்பு வந்தது.

அனந்தநாயகி தோல்வி! (வளரும்)

---

அவன் : ''மருந்துக்குக் கூட நகைச்சுவை உணர்ச்சி இல்லாத ஜென்மங்களெல்லாம் பத் திரிகை நடத்த வந்திடுச்சு!''

இவன் : ''என்னடா விஷயம்...!''

அவன் : ''ஒரே ஜோக்கை ஒன்பது பத்திரிகை களுக்கு அனுப்பி வச்சிருந்தேன்... ஒண்ணில் கூட பிரசுரமாகலே!''

- உ. ராஜாஜி



# இதோ இன்க்ரிமின் தலைமுறை

## பெரிதாக மட்டுமல்ல
## சிறப்பாக வளர!




வளரும் பருவத்தில் மிகமிகப் பெரிய வேறுபாட்டை வழங்குவது இன்க்ரிமின். உண்மையென்னவெனில் இதர டானிக்குகளை விட ஒரு படி மேலானது இன்க்ரிமின். ஆரோக்கியமான வளர்ச்சிக்குத் தேவையான வைட்டமின்களோடு கூட இன்க்ரிமின் டானிக்கில் லைஸின் உள்ளது. லைஸின் பசியைத் தூண்டுகிறது. ஒரு குழந்தை நன்கு வளர, நன்கு சாப்பிட வேண்டும் என்பது எந்தத் தாய்க்குத்தான் தெரியாது?

சிறப்பாக உண்பதை சீரிய வளர்ச்சியாக்குவது இன்க்ரிமின்.

Lederle தயாரிப்பு

*அமெரிக்கன் ஸயனமிட் கம்பெனியின் ரெஜிஸ்டர்டு ட்ரேடு மார்க்




## இன்க்ரிமின்* டானிக்

**சிறப்பாக உண்பதை சீரிய வளர்ச்சியாக்குகிறது.**

### ஊருக்கு ஊர் வேறுபாடு

பெரியோர்களைப் பார்க்கச் சென்றால் எலுமிச்சம் பழத்தை அவரிடம் கொடுத்து ஆசி பெறுவது நம் நாட்டின் வழக்கம். நேபாளத்தில் வெங்காயத்தை இப்படிப் பயன்படுத்துகிறார்கள். அது மட்டுமல்ல, அங்கே ஆலயத்தில் இறைவனுக்குப் படைப்பதுவும் வெங்காயமே.

நன்றி - என். ஏ. வேலாயுதம் எழுதிய 'உலக அறிவுகள் ஓராயிரம்'

தகவல்: கௌரி தியாகராஜன்

●

இளைஞன்: "இந்த லெட்டரைக் கொண்டு போய் உன் அக்காவிடம் கொடுத்துட்டு வா... எட்டணா தர்றேன் உனக்கு!"

பையன்: "முடியாது! இந்து ரூபாய்க்குக் குறைஞ்சு வாங்கக்கூடாதுன்னு அக்காவின் கண்டிப்பான உத்தரவு!"

- உ. ராஜாஜி

●

ஆசிரியர்: எப்பவும் ஒழுங்கா ஹோம் வொர்க் செய்வே! இப்போ நாலு நாளா உனக்கு என்ன வந்தது?

மாணவன்: எனக்கு எதுவும் வரலை சார்! எங்கப்பாவிற்கு ஆபீஸிலே ஆடிட் வந்திருக்கு!

- கே. ஆர். எம்



ஒருவர்: "உங்க பத்திரிகை நடு நிலைப் பத்திரிகைன்னு எப்
சொல்றீங்க..."

பத்திரிகை ஆசிரியர்: "பத்திரிக்கையை நடத்தவும் முடிய
நிறுத்தவும் முடியாம நடத்திட்டிருக்கேனே..!" -தினத்துக்கடவு

---

# நீங்கள் புத்திசாலி





● அய்யம்பேட்டை அய்யாசாமி நோபல்பரிசு எதையும் எதிர்பார்க்காத ஆராய்ச்சியாளர். அவரது இருபது வருஷ அரசாங்க உத்தியோகத்தில் பழுத்த ஞானமே இந்த ஆராய்ச்சிக் குறிப்புக்கள். கீழ்க்கண்ட வினாக்களுக்குப் பதில் சொல்லுங்கள்:

1. மூன்று பேர்கள் ஓட்டலுக்குப் போய் டிபன் வகையறுக்களை வெட்டுகிறீர்கள். கடைசியில் சர்வர் பில்லை எழுதும்போது—
   (அ) இதுதான் சமயமென்று கையை அலம்பி, அரை மணி நேரம் வாயைக் கொப்பளிக்கச் செல்கிறீர்கள்.
   (ஆ) பாக்கெட்டைக் குடையோ குடையென்று குடைகிறீர்கள்.
   (இ) பில்லை எடுத்து உங்கள் கையில் வைத்துக் கொள்கிறீர்கள்.

2. ஆபீஸ் மானேஜருடைய மகள் திரு
   மணத்துக்கு 'அவசர நிதி' பிரிக்கும் போது—
   (அ) ஹெட் கிளார்க் போட்ட தொகையையே போடுகிறீர்கள்.
   (ஆ) அதைவிடக் கூடுதலாகப் போடுகிறீர்கள்.
   (இ) ஒன்றும் போடாமல் 'அப்புறம் பார்க்கலாம்' என்று தனியாகப் 'பிரசன்டேஷன்' செய்கிறீர்கள்.

3. புதிய டைப்பிஸ்டிடமிருந்து காதல் கடிதம் வருகிறது. (பழைய டைப்பிஸ்டிடம் இருந்தா வரும் என்று முணு முணுக்காதீர்கள்!)
   (அ) பதில் எழுதி அவளுடன் சினிமா பார்க்கிறீர்கள் — அவள் செலவில்!



# ...காக்கு !

ஒருவர்: "எல்லாப் பத்திரிகைகளும் கேள்வி பதில் பகுதி போடுதே ஏன்?"

பத்திரிகை ஆசிரியர்: "அப்புறம், கேள்வி கேட்பாரே இல்லாம பத்திரிகை நடத்தறான்னு சொல்லு வாங்களே...!"

-இணைத்துக்கடவு ரவி

●

பத்திரிகை ஆசிரியர் புது எழுத்தாளருக்கு எழுதிய கடிதம்: "உங்கள் கதையைப் பிரசுரிக்க இயலாமைக்கு வருந்துகிறோம்........"

பி.கு: "மூர்மார்க்கெட் பின்புறமுள்ள 14/278 என்ற எண்ணுள்ள பழைய பேப்பர் கடையில் போடவும். கடை என் தம்பியுடையது. நான் அனுப்பியது என்று தெரிந்தால் நல்ல விலை கொடுப்பான்."

-இணைத்துக்கடவு ரவி

●

ஒரு முதலாளி தம்முடைய காரியதரிசியைக் கூப்பிட்டு ரகசியம் என்று சொல்லி எச்சரித்து விட்டுச் சில கடிதங்களுக்குப் பதில் கொடுத்தார்.

காரியதரிசியும் பதில் கடிதங்களை டைப் செய்து கொண்டுவந்தார். அதைப் படித்துப் பார்த்த முதலாளி 'என்ன இது ஒரே தப்பு தப்பாக இருக்கிறதே கடிதத்தை டைப் செய்தவுடன் ஒரு முறை படித்துப் பார்த்து விடக் கூடாதா' என்றார்.

'ரகசியம் என்று சொன்னீர்களே நான் படிக்கலாமோ கூடாதோ என்று சும்மா இருந்து விட்டேன்' என்றார் காரியதரிசி.

- பிரியா பாலு

நீதிபதி: நீ இதுக்கு முன் ஜெயிலுக்குப் போயிருக்கிறேயா?
கைதி: இல்லே
நீதிபதி: இந்தத் தடவை போகலாம்! கவலைப்படாதே.

- பிரியா பாலு

# ...ா, அசடா, அப்பாவியா?





செய்
புகார்
...) மானேஜரிடம்
...கிறீர்கள்.
...) கடிதத்தை எல்லாரிடமும் 'ரகசிய
...மாக'க் காட்டுகிறீர்கள்.

வீட்டில் நீங்களாகவே தயார் பண்ணின உப்புமாவை ஆபீசுக்குக் கொண்டுவரும் போது, அதைப் பிறர் பாராட்ட—

(அ) நீங்களே எடுத்துக் 'கொள்ளுங்க ளேன்' என்று விநியோகம் செய் கிறீர்களா?

(ஆ) என் மனைவி தயார் பண்ணினது தான் என்று கூசாமல் பொய் சொல்கிறீர்களா?

(இ) நான்தான் பண்ணினது என்று பெருமை அடித்துக்கொள்வீர் களா?

5. மாசக் கடைசி, பியூன் நீங்கள் ஆபீசுக்கு வரும்போது 'குட்மார்னிங்' (வழக்கத் துக்கு மாறாக!) போட்டால்—

(அ) பேசாமல் போய்விடுவீர்களா?

(ஆ) பதிலுக்கு குட்மார்னிங் போடுவீர் களா?

(இ) 'என்னப்பா விஷயம்?' என்று அவனுக்கு 'உதவ' முற்படுவீர்களா?

மார்க்குகள்:

ஒவ்வொரு (அ)வுக்கும் பூஜ்யம்!
ஒவ்வொரு (ஆ)வுக்கும் 5 மார்க்குகள்!
ஒவ்வொரு (இ)க்கும் 10 மார்க்குகள்!
பூஜ்யம் எடுத்தவர்கள் புத்திசாலிகள்
அதற்கு மேல் எடுத்தவர்கள் அசடுகள்.
அதற்கு மேல்?... என்னத்தைச் சொல்ல?

-விஜய்

# பலி ஆடுகள்

கிருஷ்ணகுரு

"ம்... என்ன விசேஷம் இன்னிக்கு?" என்று வேணு இயல்பாகப் பேச்சை ஆரம்பித்தபோது திக்கென்றது வேதாவுக்கு... அவன் இரண்டு வாய்கூட அள்ளி வாயில் போட்டிருக்கவில்லை. விசேஷத்தைச் சொன்னால் புருஷனுக்கு ஏகாதசிகூட இல்லை...முழுப் பட்டினிதான் என்று மனத்தில் படப் பேசாமல் எழுந்து உள்ளே போனான்.

கொஞ்சம் மோர் சாதம் தட்டில் இருந்தபோது வேதா பயத்துடன் மெள்ள ஆரம்பித்தாள்.

"போஸ்ட்மேன் வந்திருந்தார்...."

திகைப்புடன் தலையை உயர்த்தினான் வேணு.

"பணம் திரும்பிவந்து விட்டதா என்ன?"

"ஆமாம்...விஜயா வாங்கலைபோலிருக்கு!"

மேற்கொண்டு சாப்பிட வேணுவுக்குப் பிடிக்கவில்லை. சாப்பிட்டாலும் கூட எதிர்த்து வருகிற மாதிரி உணர்ந்தான். கையை அலம்பிக் கொண்டு எழுந்தான்.

"என்ன சமாசாரமாம்..."

"என்ன இழவோ... யாருக்குத் தெரியும்? தீபாவளிக்கு அனுப்பிய பணத்தைத் திருப்பி அனுப்பறது தர்மமே இல்லை.... அவங்களுக்கு யாருசொல்றது.... உங்கதங்கை திருப்பி அனுப்பியிருக்க மாட்டா... அழகான மாப்பிள்ளை... அவரை எதிர்த்துப் பேச முடியுமா அவளாலே...."

வேணு பேசாமல் பாயைப் போட்டுப் படுத்தான். கண்கள் மூடியிருந்தாலும் எரிச்சல் கனன்றது. இது நெஞ்சில் ஏற்பட்டதா... கண்ணில் ஏற்பட்டதாதெரியவில்லை!

தங்கையைப் பார்த்து ஆறு வருஷமாகியிருந்தது. வருஷா வருஷம் தீபாவளிக்குக் குடும்பத்தில் பிறந்த பெண்களுக்குப் பணம் அனுப்புவது குடும்ப வழக்கம். கூடப் பிறந்தவர்கள் அதை அனுப்பாமல் விடுவது கேவலம். அப்படி அனுப்பிய பணம் எந்த வருஷமுமில்லாமல் இந்த வருஷம் திரும்பி வந்திருக்கிறது. அதுஅனுப்பிய பாடே பெரிசு! அதைப் புரிந்துகொள்ள யாருக்கு நேரம் இருந்தது....

எட்டு வருஷங்களாகியும் மாப்பிள்ளைக்கு முறுக்கு உடையவில்லை;

வேணு விஜயாவைச் சோமுவுக்குக்கொடுத்தபோது சாதாரணமாகத்தான் இருந்தான். விஜயாவும் அழகி என்று சொல்லிவிட முடியாது. குடும்பப் பாங்காக இருப்பாள். வேணு தன்னால் முடிந்தவரை போட்டுச் சுமாராகத்தான் செய்து கொடுத்தான். அவர்களுடைய தகுதிக்கு அன்று அது அதிகம் தான். கல்யாணம் ஆகி இரண்டு வருஷங்களுக்குள் சோமுவின் நிலை உயர உயர அவனும் மாற ஆரம்பித்தான். அங்கே வேணுவின் மதிப்பு சர்ரென்று இறங்கி ஒன்றுமில்லாதவனாகிப் போனான். தகுதிக்குச் சரியாகச் செய்யவில்லை என்ற வாதம், தங்கையின் மாமியாரிடம் ஆரம்பித்த மரியாதைக் குறைவான கேவலமான வார்த்தைகள் இதெல்லாம் தொடரத் தங்கையின் வீட்டுக்குப் போவதைக் குறைத்து ஒரேயடியாகத் தங்கையைப் பார்ப்பது நின்றே போய்விட்டது. ஆறு வருஷங்களாக இருந்த ஒரே தொடர்பு இந்தப் பண்டிகைப் பணம் அனுப்புவதுதான். அதுவும் திரும்பி வந்து விட்டது.

தூக்கம் பிடிக்காமல் எழுந்தான்.

"என்ன தூக்கம் வரல்லியா..." என்று வேதா அனுதாபத்துடன் கேட்டபோது ஸ்வரம் எழாமல் முனகினான்....

"உங்க சின்னத் தம்பி வந்திருந்தார். அவர் அக்காவைப் பார்க்கப் போயிருந்தாராம்.... சொல்லவே சங்கடமாக இருக்கு. இப்போ விஜயா புருஷன் நிறைய குடிக்கிறாராம். தினமும் விஜயாவைப் போட்டுஅடிக்கிறாராம். தினம் தப்பினாலும் அடி தப்பறதில்லையாம். போன ஞாயிற்றுக் கிழமை ராத்திரி அடி அடின்னு அடிச்சுப் புழக்கடையிலே மழை இருட்டிலே நிறுத்திட்டாராம்.... போன மாசம் கொதிக்கிற பாலை உதைச்சு அது விஜயா முகத்திலே, முதுகிலே பட்டு ஒரே கொப்புளமாம்.

"மாமியார் கொடுமை, வாழாவெட்டியா இருக்கிற நாத்தி கொடுமை வேறேயாம். கேட்க முடியாத பேச்சாம்.... சமயத்திலே இழுத்துப் போட்டு அடிச்சிடறாங்களாம். ...இப்ப விஜயா மூழுகாம வேறே இருக்காளாம்...."

அந்த வேதனையிலும் வேணுவுக்குச் சிரிப்பு வந்தது. "பெண் டாட்டிபிடிக்கவில்லை" என்று ஊர் முழுக்கத் தம்பட்டம் அடிக்கிற மைத்துனன் வருஷம் தவறாமல் பிள்ளை பெற்றால் சிரிப்பு வராதா என்ன...

"யாரோ ஒருத்தியை வச்சிருக்காராமே?"

"ம்...." என்று அசுவாரஸ்யமாக முனகினான்வேணு. அதைப் பற்றிக் கவலைப்பட அவன் தயாரில்லை. தங்கையைப் பற்றிக் கவலைப்படலாம். அவள் அடிபட்டுச் சாகிறாளே என்று நோக

லாம்... மைத்துனன் அடிக்கிற கூத்தைப் பற்றிக் கவலைப்பட அவன் யார்...?

சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டு கடைக்குப் போக நடந்தான். மனசு கனமாக இருந்தது. ஒரு பெண்ணை இப்படிக் கூடக் கொடுமைப் படுத்துவார்களா . . . மாதமாக இருக்கிற பெண்ணை ராத்திரியில் மழையில் நிறுத்துவது என்ன விதத்தில் நியாயம்.... ரௌத்திரகாரமான கோபம் மனத்தில் எழுந்தது. ஆனால் தன்னால் எதுவும் செய்ய முடியாது என்று பட்டதும் தன் இயலாமையை நினைத்து வெட்கம் வந்தது. யார் யார் மேலேயோ கோபம் வந்தது.

மைத்துனன் சோமு கொஞ்சம் முரடன். பழகுகிறவர்கள் எல்லாம் முரடர்கள். குடி, போலீஸ் இதெல்லாம் அவர்களுக்குச் சகஜம். மானம் மரியாதை விட்டுத் தெருச் சண்டைக்கு நிற்க அவர்களால் முடியும். போலீஸ் கோர்ட்டு என்று செலவு செய்ய அவர்களுக்கு வசதி உண்டு. இங்கே வயிற்றுச் சோறே பிரச்னை. இதில் வேறு விஷயங்கள் எல்லாம் வேணுவுக்குச் சாதனைகள்.

கடைக்கு வந்தபோது தம்பி வந்து காத்திருந்தான்.... அவனைப் பார்த்தபோதே 'திக்' கென்றது. என்ன கொண்டு வந்திருக்கிறானோ... என்ன நடந்ததோ...?

''என்னடா சமாசாரம்?'' என்று பதற்றத்தை மறைத்துக் கொண்டு கேட்டான். கொஞ்சம் தயங்கிய பின் அவன் ''ஒண்ணுமில்லே.... அக்காவுக்கு அபார்ஷன் ஆயிடுச்சாம். கவர்ன்மெண்ட் ஆஸ்பத்திரிக்குக்





அருள்வாக்கு

## ஸத் ஸங்கம்

துரியோதனனும் தர்மபுத்திரரும் சுற்றிக் கொண்டு வந்தார்கள். துரியோதனனுக்கு எல்லோரும் கெட்டவர்களாகத் தென்பட்டனர், ஆனால் !தர்மருக்கு எல்லோரும் நல்லவர்களாகவே தெரிந்தார்கள். தர்மருக்கே ஓர் இடத்தில் மனம் கொஞ்சம் சஞ்சலப்பட்டது. ஒருவன் பிராணிகளைக் கொன்று மாமிசம் தயார் செய்து கொண்டு இருந்தான். ''ஏன் இவ்விதம் கொலை செய்கிறான்? இவன் கெட்டவனாகத் தென்படுகிறானே'' என்று எண்ணினார். பிறகு அந்தக் கசாப்புக் கடைக்காரனிடமும் அவருக்கு ஒரு நல்ல அம்சம் தென்பட்டது. வியாபாரம் துவங்குவதற்கு முன்னால் தான் தயாரித்த மாமிசத் துண்டுகளைக் கூரைமீது காகங்கள் சாப்பிட எறிந்தான். சிலவற்றை நாய்க்குப் போட்டான். அவனும் பிராணிகளிடம் அன்பு காட்டினான். இதைக் கண்டு தர்மர் அவனையும் நல்லவனாகவே கொண்டார். நல்லவர்கள் பிறரிடம் கெடுதல்களைக் காணமாட்டார்கள். கெட்டவர்கள் மற்றவரிடம் கெட்டதையே காண்பர். தர்மசீலரான தர்ம புத்திரரே க்ஷணக் காலம் ஒருவனைக் கெட்டவனாக எண்ணலாமா? சிந்திக்க வேண்டும். இதற்குக் காரணம் அவருடன் ஒருவன் வந்து கொண்டிருந்தானே. அந்தச் சிறிது நேரச் சேர்க்கையே தர்மசீலரின் புத்தியை மாற்றிவிட்டது. இது துர்ச் சங்கத்தின் விளைவு. இதற்கு நேர் மாறானது ஸத் ஸங்கம். கண் இரண்டானாலும் பார்வை ஒன்றுதான். எதிலும் நல்லதைக் காண வேண்டும். நான் தினசரிப் பத்திரிகைகளைப் படிக்கும்போது 'உலகம் கெட்டுப் போகிறதே' என்று வருத்தப்படுவதுண்டு. ஆனால் உலகத்தில் நல்ல காரியங்களும் நடக்கின்றன. பல கும்பாபிஷேகங்களும், பல தார்மீகப் பிரசங்கங்களும் நடந்து கொண்டு இருப்பதைக் காணும் போது நாம் நினைத்தபடி தர்மம் கெட்டுப் போகவில்லை என்று தெரிகிறது. தர்ம சிந்தனையும் பக்தியும் காணப்படுவதில் மகிழ்ச்சி. இருப்பினும் அது வறண்ட பக்தியாக இல்லாமல் மனத் தூய்மையுடனும் ஒழுக்கத்துடனும் கலந்திருக்க வேண்டும். இதற்கெல்லாம் முதற்படி ஸத்ஸங்கம்.

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜயேந்திர சரஸ்வதி சங்கராச்சாரியசுவாமிகள்

கொண்டு போயிருக்காங்களாம். அதான் வந்தேன்'' என்றான்.

''எப்படி ஆச்சாம்?''

''நேத்துக் குடிச்சிட்டு வந்து அவன் உதைச்சிருக்கான்...''

''தெய்வமே...'' என்று மனசுக்குள் அரற்றிக் கொண்டான்.

''நான் போய்ப் பார்க்கிறேன்'' என்றான் வேணு.

''வாண்ணா...'' என்று ஈன ஸ்வரத்தில் வரவேற்றாள் விஜயா. ''ரொம்ப இளைச்சுப் போயிட்டே....''

''என்னை விடு... இப்படி ஆயிட்டியேம்மா. கஷ்டம் நம்ம கிட்ட ஆயிரம் இருந்திருக்கும். கல்யாணமாகிறபோது கிழங்கு மாதிரி இருந்தே... நீ யார்னே புரியாமல் வீணாப் போயிட்டியேம்மா....''

''நீ பாத்ததுக்குப் பின்னாடி மூணு குழந்தைகளுக்குத் தாயாயிட்டேன்... நாலு அபார்ஷனுக்கு ஆளாயிட்டேன்... இது போதாதுன்னு....'' என்று நிறுத்தினாள்.

அவள் என்ன சொல்ல வருகிறாள் என்று வேணுவுக்குப் புரிந்தது. ''இது போதாதுன்னு அடி வதை.மனசு கஷ்டம்தொல்லை!''

''ஏம்மா ஏதாவது சாப்பிடறயா ...கொஞ்சம் காப்பி...''

சந்தோஷத்துடன் தலையை ஆட்டினாள். முகத்தில் களைப்பின் ரேகைகள் இருந்தன. எப்போது சாப்பிட்டதோ... யாரும் கவனித்த கவலையே காணோம்...

''அட பாவிகளா... உங்களுக்காக என் தங்கை எவ்வளவு உழைத்திருப்பாள்... ஒரு காப்பி வாங்க, ரெண்டு ஆரஞ்சுப் பழத்துக்கு யாரும் இல்லையே.... இப்படி அப்படி அசைய முடியாத அவளுக்கு ஒரு வாய் தண்ணீர் கொடுக்க ஆளில்லையா... என்று மனசில் கனம் ஏறியது. கண்ணில் அரும்பிய நீரை மறைத்துக்கொண்டு ஓடி நாலு சாத்துக்குடிகளையும் கடைக்காரரிடம் கெஞ்சி டபராவில் நெஸ் காப்பி ஒன்றையும் வாங்கிக் கொண்டு வந்தான். கொண்டு வந்து ஆற்றிக் கொடுத்த போது அவள் உயிரையே வாங்கிக் குடித்துப் பிழைத்துப் போகிற மாதிரி ஆவலுடன் குடித்தாள். கை நடுங்கியது. முகம் வியர்த்து, குடித்த களைப்பு தெரிந்தது.

''வேறே என்னம்மா வேணும்...'' என்று அன்பு குழையக் கேட்டான் வேணு.

''வேறே ஒண்ணும் வேண்டாம்.... ஒரு தடவை உன்னப் பார்க்கணும் போல இருந்தது. நீ வந்துட்டே.... ரொம்பத் திருப்தியண்ணா....''

''அப்படி யெல்லாம் சொல்லாதேம்மா. நீ சௌக்கியமாயிடுவே...இதெல்லாம் பெண்களுக்கு சகஜம்... ஏம்மா எதுக்கு இப்படி பிள்ளை பெத்துக்கிட்டுக் கஷ்டப்படறே... ஒரு ஆபரேஷன் செய்துக்கறது....''

''ஆமா... புள்ளை பெத்துக்க ஆசைப்பட்டு நான் பெத்துக்கறது மாதிரியில்லே நீ பேசறே? போன தடவையே டாக்டரம்மா சொல்லிட்டாங்க...அடுத்த குழந்தை பொறந்தா உன் உசிருக்கே ஆபத்துன்னு... இப்போ அபார்ஷன் ஆயிடுச்சி.... அடுத்தது ரெண்டு மாசத்




# பிலிப்ஸ் மெயின்ஸ் ரேடியோக்கள் உங்கள் குடும்பத்திற்கேற்ற, மற்ெருரு நல்ல குடும்பம்



**ப்ரைடு**

■ சாலிட் ஸ்டேட் 3-பாண்டு மெயின்ஸ் ரேடியோ.

ரூ. 675/-*



**மைனர்**

■ 2-பாண்டு மெயின்ஸ் ரேடியோ-2000 mW உயர்வான அவுட்புட் கொண்டது.

ரூ. 460/-*



**ப்ரெஸ்டிஜ்**

■ சாலிட் ஸ்டேட் 4-பாண்டு மெயின்ஸ் ரேடியோ.

ரூ. 875/-*



**மேஜர்**

■ 4-பாண்டு சாலிட் ஸ்டேட் ரேடியோ உயர்ந்த ஒலியைத் தரும்வகையில் அமைக்கப்பட்ட டீக் வினியர்டு வுடன் காபினட்.

ரூ. 1075/-*

* சில்லறை விற்பனை உச்சவிலை, எக்ஸைஸ் வரி உள்ளிட்டது. மாநில விற்பனைவரி மேலும் இதர தலவரிகள் தனி.

மேலானதை உங்களுக்கு வழங்குவதே எங்கள் நோக்கம்.

**பிலிப்ஸ்**

பைகோ எலக்ட்ரானிக்ஸ் அண்ட எலக்ட்ரிகல்ஸ் லி.

CASPR-757-104 TM

திலே உடனே உண்டாகப் போகுது... உடம் பிலே ரத்தமே இல்லேங்கறாங்க... இப்படி இருந்தா உடம்பு தாங்குமா என்ன... அது அவங்களுக்குத் தெரியாதா... தெரியும் அண்ணு... தெரிஞ்சே செய்யறாங்க. என்ன அர்த்தம்... நான் தொலைஞ்சி போறதுக்கு இது ஒரு தொல்லே இல்லாத வழி... சட்டம் அவங்களை ஏதும் செய்ய முடியாது...''

''கடவுளே....'' என்று அதிர்ந்து போய்க் கட்டிலில் உட்கார்ந்தான் வேணு.

''தெய்வங்களே... இந்தக் கொடுமையை நீங்களெல்லாம் பார்க்கவும் சகிக்கிறதோ...'' என்று மனசுக்குள் புலம்பினன்.

''ஏம்மா...இது கொலே இல்லே... கிரா தகம் இல்லே...''

''கிராதகமா இருக்கலாம்... கொலே யில்லே... ஏன்னு கொலேகாரனுக்குத் தண் டனை உணடு... இவங்களுக்குத் தண்டனை எங்கே இருக்கு... தண்டனையில்லாத ஒன்று எப்படிக் குற்றமாகும்...''

திடீரென்று ஆவேசம் வந்தவன் மாதிரி பேசினன். ''இதோ பாரும்மா.. இனிமே நான் உன்னே அங்கே விட மாட்டேன். நான் குடிக்கிற கஞ்சியை நீயும் குடி... குழந்தை களைக் கூட்டி வந்துடு...''

''அவங்க விட மாட்டாங்களே...''

''விவாக ரத்து வாங்கு.''

''ஆத்திரப்படாம யோசி, அண்ணு...உன் குடும்பத்தைத் தாங்கவே உன்னுலே முடி யல்லே.... என்னேயும் குழந்தைகளையும் வச்சி நீ என்ன செய்ய முடியும்...''

''நான் இதைப் போலீசுக்கும் கலெக்டருக் கும் எழுதறேன்.''

''அந்த மாதிரி தப்பு ஏதும் செஞ்சி அசிங்கப்படுத்திடாதே... நான் போனலும் பெத்துட்ட தோஷத்துக்குக் கஞ்சியோ கூழோ ஊத்திக் குழந்தைகளேக் காப்பாத்து வாங்கன்னு எனக்கு நிச்சயமான நம்பிக்கை இருக்கு... நீ ஏதாவது செய்து குழந்தை களையும் அவங்களே விட்டுப் பிரிச்சிடாதே... அதுகளை அநாதைகள் ஆக்கிடாதே. உன்னேக் கும்பிட்டுக் கேட்டுக்கறேன்...''

''நான் என்னதாம்மா செய்யறது...''

''நீ ரொம்ப நல்லவன் அண்ணு... சந் தோஷமா இரு. நான் உனக்கு நிறையக் கடன் பட்டிருக்கேன்... அடுத்த ஜன்மத் திலே தாயாய்ப் பொறந்து தீர்த்துடறேன்... விஜயா செத்துட்டான்னு நெனைச்சுக்கோ... அந்த முடிவோட இங்கே இருந்து போ.... யாரோடேயும் வம்பு பண்ணிக்காதே... அரக்கர் கொடுமையைத் தேவர்களாலேயே தாங்க முடியாம ஈஸ்வரனை அண்டி ஓடு வாங்களாம்... நீயும் ஈஸ்வரனைத் தியா னிச்சுக்கோ.... அவன் அவர்களுக்குப் புத்தி கொடுத்து நான் பொழச்சா உன் அதிர்ஷ் டம்... நீ இவங்களை எதிர்க்க முடியாது'' என்று அவள் சொன்னபோது கைகளால் வாயைப் பொத்திக் கொண்டு குலுங்கக் குலுங்க அழுதுவிட்டு வேணு புறப்பட்டான். விஜயாவால் அழக்கூட முடியவில்லே. நீர் வற்றிப் போய்விட்டதோ என்னவோ. அவள் மனசில் சிம்ப்பிடித்த கொப்புளங்கள்தான் இருக்கும் என்பது நிச்சயம். தன் வரவு கொஞ்சம் அவளுக்கு இதமளித்திருக்கலாம்.

---

# தெய்வத் திருமணங்கள்

**படம் பார்ப்பதற்குமுன் எதிர்பார்ப்புகள்:**

வழக்கத்துக்கு மாருக, கடவுள் களின் திருவிளையாடல்களைக் காட்டா மல் அவர்களின் திருமண வைபவத் தைக் காட்டப் போகிறார்களாம். மூன்று டைரக்டர்களாம். மூன்று இசையமைப்பாளர்களாம். ஆறு ஒளிப் பதிவாளர்களாம். ஹு'ம். 'டுமெனி குக்ஸ் ஸ்பாயில் த பிராத்' கதையாகாமல் இருந்தால் சரி.

**படம் பார்த்தபின் எண்ணங்கள்:**

மீனுட்சி கல்யாணம்: டைரக்டர் ப. நீலகண்டன். ஏராளமான செட். ஏராளமான மேக்கப். சுண்டேோ தரன் காட்சிகள் விட்டலாச்சார்யா பாணி. மீனுட்சி லதா — அதிக அறி வுரை. கே. வி. மகாதேவன் இசை யில் பக்தி உள்ளது. சாதாரணக் கல் யாணம். மாங்கல்யம் வேண்டுவோர் மதுரை செல்க!

வள்ளி திருமணம்: காமேஸ்வர ராவ் டைரக்ஷன். இளமை துள்ளும் கல்யாணம். மாடர்ன் வாசனை வீசும் கல்யாணம். காரணம் 1. வெங்க டேஷ் இசை. 2. வெளிப்புறப் படப் பிடிப்பு. வள்ளி ஸ்ரீதேவி. முருகன் ராஜ்குமார். கண்ணதாசனின் கிளு கிளுப்பான வசனங்கள். குழுமை யான ஸ்ரீதேவி நடனங்கள். நன்ருய்ச் சிண்டு முடியும் நாரதர் வெ. ஆ. மூர்த்தி.

ஆரோக்கியம் வேண்டுவோர் தணிகை செல்க!

ஸ்ரீனிவாச கல்யாணம்: கே. சங்கர் டைரக்ஷன் — ஏதோ இருக்கிறது. எம். எஸ். வி. இசை இனிமையாக உள்ளது. ரொம்ப நாளைக்கப்புறம் விஜய குமாரி. பத்மாவதியாய் ஸ்ரீப்ரியா. விரகதாபத்தை முகத்தில் காட்டும் முதிர்ந்த நடிப்பு. ஸ்ரீனி வாசன். ரவிகுமார். ஏராள பொருட் செலவு உடையிலும் 'செட்'டிலும் பிரதிபலிக்கிறது. பிரமாதமாய் ஒன்றுமில்லே.

செல்வம் வேண்டுவோர் திருமலை செல்க!

-நளினி சாஸ்திரி



ஒரு வாரகாலமாகக் கஸ்தூரி வேலைக்குப் போகவில்லை. டாக்டர் உத்தரவின்படியே லீவு எடுத்துக் கொண்டு வீட்டிலேயே ஓய்வாக இருந்தாள். மருந்துகளின் மயக்கத்தில் நாளின் பெரும் பகுதியைத் தூங்கியே கழித்தாள். நிற்க நேரமின்றித் தன்னைப் பற்றிய நினைப்பும் இன்றிப் பல காலம் உழைத்து விட்டிருந்தவள் – மகனுக்கு ஏற்பட்ட ஏமாற்றத்தினால் மனம் நொந்து போனவள் - அவனுக்கு நேர்ந்த கார் விபத்தின்போது அவள் பட்ட கவலைகள். இவை அனைத்துக்கும் சேர்த்து இப்போது அவளுக்குப் படுக்கையில் இருக்க வேண்டிய அளவு ஓய்வு தேவைப்பட்டது.

ஹர்ஷன் காலையில் வெளியே கிளம்பும் போது அம்மாவின் அறை வாயிலில் நின்று எட்டிப் பார்த்தான். அவள் தூங்கிக்கொண்டிருந்தாள். மாலை வீட்டுக்குத் திரும்பும் போதும் அவள் ஆழ்ந்த நித்திரையில் இருந்தாள். வெளியிலிருந்து வெகு நேரம் சென்ற பின்னர் இரவு வீடு திரும்பியபோதும் அவள் உறங்கிக் கொண்டிருந்தாள்.

ஒரு வார காலமாகத் தாயிடம் ஒரு வார்த்தைகூடப் பேச முடியாது போனதை எண்ணி அவனுக்கு வேதனையாக இருந்தது. கொஞ்சம் வெட்கமாகக் கூட இருந்தது. ஆனால், அவனுடைய அன்றாட வாழ்க்கை நியதியில் எந்தவிதமான மாறுதலும் இல்லை. மாதங்கி அவனை நன்றாகவே கவனித்துக் கொண்டாள்.

குளித்துவிட்டு வருவதற்குள் காலையில், அவனது காப்பி பலகாரம் மேஜைமீது தயாராக வைக்கப்பட்டிருக்கும். கையோடு எடுத்துப்போக, டிபன் டப்பா கூடத் தயாராக இருக்கும். மாலை வந்ததும், முகத்தைக் கழுவிக் கொண்டு வேறு உடுத்தி வருவதற்குள் டிபன் அவனுக்காகக் காத்திருக்கும். இரவு, அவன் எத்தனை நேரம் கழித்து வீடு திரும்பினாலும், சாப்பாடு பரிமாறிக் கவனித்துக் கொள்ள மாதங்கி விழிப்புடனிருந்தாள்.



முன்பெல்லாம்,—தாயாருக்கு உடம்பு சுக மில்லாது ஒரு நாள் வீட்டில் தங்க நேரிட்டாலும் போதும். அவனுக்கு அலுவலகத்தில் வேலையே ஓடாது. தவித்துக் கொண்டிருப்பான்.

''வேலைக்காரி வீட்டுக்குப் போய்விட்டிருப்பாளோ? அம்மாவுக்குக் காய்ச்சல். ஒரு வாய் **தண்ணீர்** எடுத்துக் கொடுக்கக் கூட யாரும் இல்லையே'' என்று கவலைப்படுவது வழக்கம்.

இந்த ஒரு வார காலமாக அப்படிப்பட்ட கவலை யெல்லாம் அவனுக்கு ஏற்படவில்லை. மாதங்கி கவனித்துக் கொள்கிறாள் என்ற நிம்மதி! ஆனாலும் அம்மாவிடம் நேரிடையாக ஒரு வார்த்தை கூடப் பேசமுடியவில்லையே என்ற குற்ற உணர்வு மனத்தைக் குடைந்து கொண்டே இருந்தது.

அன்று மாலை வெளியே சென்றவன், இருட்டிய 'பின் சிறிது நேரத்துக்குள்ளேயே வீடு திரும்பிவிட்டிருந்தான். காரைக் காரேஜில் நிறுத்திப் பூட்டிவிட்டு உள்ளே நுழைந்தவன் மிகவும் பரபரப்புடன் காணப்பட்டான். அதற்குக் காரணம் இல்லாமல் இல்லை.

அவர்களது குடும்ப நண்பர் நாராயண சாமியை எதிர்பாராத விதமாகக் கடற்கரையில் சந்தித்து விட்டான் அவன். ஊர்மிளாவும் அவனும் ஒரு வார காலமாகத் தினசரி கடற்கரைக்குச் சென்று, மணலில் அமர்ந்தபடி தனியே, வார்த்தையாடுவது வழக்கமாயிருந்தது.

அவன் உள்ளத்தில் நீறு பூத்த நெருப்பாக இன்னமும் அவள் மீது ஆசை லேசாக மூண்டுகொண்டு இருந்தது உண்மை. எவ்வளவோ முயன்றும் அவனால் அதை அடக்க முடியாத நிலை. போதை மருந்தைத் தின்று விட்டவன் போல அவனது பேச்சிலும் சிரிப்பிலும் இன்னமும் மயங்கிய நிலையில் தன்வசமிழந்து கொண்டிருந்தான்.



நாராயணசாமி அவர்கள் குடும்பத்துடன் நெருங்கிய பழக்கம் உள்ளவர். அவனது தந்தையுடன் படித்தவர். பழகியவர். அவ்வப்போது குடும்ப நலனை விசாரித்து வரும் நல்லதொரு மனிதர். சங்கடமான சந்தர்ப்பங்களின்போதெல்லாம், கஸ்தூரி அவரது ஆலோசனையைக் கேட்கத் தவறியதில்லை. அவர் சொந்த வியாபார வேலைகள் இருந்தும் கூட, அவனது கல்யாணத்தில் கலந்து கொள்ள விடியுமுன் தமது காரில் புறப்பட்டுத் திருத்தணிக்கு ஓடோடி வந்திருந்தவர்.

அன்று மாலை, அந்த நாராயணசாமியும், கடற்கரையில் சற்று நேரம் காற்று வாங்க வந்தவர் கண்டுவிட்டார்!

காரிலிருந்து இறங்கி, நடை பாதையில் சற்று நடந்து அலுத்த பின், மணலில் இறங்கியவர் முன், ஹர்ஷன்! கூடவே மகிழ்ச்சி குலுங்க அவன் அருகே... யார் அந்தப் பெண்?

மிக அருகாக நெருங்கியபோது தூக்கி வாரிப் போட்டது. சில நாட்களுக்கு முன், திருத்தணியில், கல்யாண மண்டபத்தில் அவன் அருகே உட்கார்ந்திருந்த அந்த அமைதியான பெண்... அவள் இல்லை....

மூக்கின் மீது நழுவிய கண்ணாடியைச் சரி செய்து கொண்டார். பளிச்சென்று வீசிக் கொண்டிருந்த மாலை வெய்யில் மறையத் துவங்கிய நேரம். மீண்டும் நன்கு உற்றுப் பார்த்தார்.

இரண்டு வருஷங்களுக்கு முன் ஹர்ஷனை வேண்டாம் என்று கல்யாண சமயம் வரும்போது தட்டிக் கழித்துவிட்டு வேறு ஒருத்தனை மணந்துகொண்டு மறைந்துபோன ஊர்மிளா அல்லவா? இவளுடன், இங்கே....? என்ன சம்பந்தம்... அதுவும் தனியாக உட்கார்ந்து கொண்டு....?

தொண்டையைக் கனைத்துக் கொண்டார் நாராயணசாமி.

திரும்பிப் பார்த்த ஹர்ஷன் தூக்கிவாரிப் போட எழுந்தான். குற்ற உணர்வில் குன்றிப் போய்விட்டான் ஒரு கணம். பிறகு அவர் அருகே வந்தவன், சமாளித்தபடி, ''வீட்டுப் பக்கம் வந்து ரொம்ப நாளாச்சதே'' என்று விசாரித்தான்.

தலையைக் குனிந்து கொண்டு மணல் மீது கோலம் போட்டுக் கொண்டிருந்த ஊர்மிளாவை வெறுப்புடன் உற்றுப் பார்த்தார் அவர். அதற்குமேல் சினம் கட்டுக்கடங்காமல் போயிற்று.

''ஏனப்பா ஹர்ஷா! இன்னொருத்தன் மனைவியோட கடற் கரையில் உலாத்தறது எந்த நாகரிகத்தில் சேர்த்தி? உங்கப்பா உசிரோட இருந்து இதைப் பார்த்தால் அப்படியே குன்னிப் போயிருப்பான். ரொம்ப கண்யமான மனுஷன். குழிப்பிள்ளையைத் தோண்டி எழவு கொண்டாடற கதையா... விட்டுப் போன விவகாரத்தை இப்போ எதுக்காகத் தொடரணும்? நீ என்ன சமாதானம் சொன்னாலும் என் மனசு ஏத்காது. உன்னைவிட வயசிலும் அனுபவத்திலும் நான் பெரியவன். நெருப்போட விளையாடினா என்ன நேரும்னு தெரியுமா?'' படபடவெனப் பொழிந்து விட்டு அவனது பதிலுக்குக்கூடக் காத்திராமல் அப்பால் சென்று விட்டார்.

ஹர்ஷன் முகம் சிவந்து போயிற்று.

''அந்த வழுக்கை மண்டை மனிதன் என்ன உளறினான்?'' ஏளனமும், கோபமுமாக ஊர்மிளா கேட்டாள்.

''அவர் எங்கள் குடும்ப நண்பர்.''

''தெரியுமே! இந்தக் கட்டுப்பெட்டியின் பேச்சுக்கு உங்கம்மா மதிப்புக் கொடுப்பாங்க. ஏன்னா அவங்களும் ஒரு பத்தாம் பசலி... ஹர்ஷன்! இப்ப நான் ஒரு உண்மையைச் சொல்லப் போறேன். நம்ம கல்யாணம் ஏன் நின்னு போச்சு தெரியுமா?''

ஹர்ஷன் நிமிர்ந்து பார்த்தான்.

''உங்கம்மா படிச்ச வேலைக்குப் போனால் மட்டும் போதுமா? கொள்கையளவில் ஒரு பழங்காலத்துக் கிராமாந்தரம்! அவங்களுக்கு அடிமையா இருக்கிற மருமகள் வேணும்னு எதிர்பார்த்தாங்க. அதனால என்னைப் பிடிக்கலே!'' அசட்டையாகக் கூறினாள்.

ஹர்ஷன் நெஞ்சு துடிக்கக் கோபமாக நின்றான்.

''உங்கம்மாவுக்கு உடம்புக்கு முடியலேன்னு படுத்திருப்பது எல்லாம் வெறும் வேஷம். மகனைத் தன் முந்தானையிலேயே முடிஞ்சு வச்சுக்கணும். மருமகளை விரட்டி வேலை வாங்கணும். அப்படி ஒரு நாடகம்.''

அவனுக்கு வார்த்தைகள் வறண்டன.

''ஹர்ஷன்! உங்க நிறுவனத்தில உங்க கீழே எத்தனை பேரை வேலை வாங்கறீங்க. திறமையா நிர்வாகம் நடத்தறீங்க. ஆனால் வீட்ல... அம்மா இட்ட நடுக்கம்! அதுதான் எனக்கு அதிசயமா இருக்கு. உங்க அம்மாவோட அதிகாரத்தைத் தாண்டிக்கிட்டு வந்தாத்தான் நமக்கு ஒரு நல்ல காலம் இருக்கும்''

''என்ன சொல்றே ஊர்மிளா?''

''ஒரு வாரமாச் சொல்லிக்கிட்டு வரதைத் தான் சொல்றேன். எனக்கு என் மண வாழ்க்கை கசந்து விட்டது. உங்களுக்கும் மனம்போல வாழ்க்கை அமையவில்லை. நாம் ஒருவர்க்கொருவர் நேசிச்சவங்க....''

அதற்கு மேல் ஹர்ஷனுக்குப் பிடிக்கவில்லை. நாராயணசாமியின் வார்த்தைகளை, கடற்காற்று அலை அலையாக, சாட்டையடி போலக் காதுகளில் மோதி மனம் வேதனைப்பட்டது.

''ஊர்மிளா! அவசரப்பட்டு முடிவு செய்கிற விஷயம் இல்லே இது! இருட்டத் தொடங்கி விட்டது. கிளம்புவோம்.'' வேட்டி மீது ஒட்டிக் கொண்டிருந்த மணலை உதறினான். அத்துடன் அந்த அற்பமான ஆசையையும் உதறி எறிந்த உணர்வு. வேகமாகக் காரை நோக்கி நடந்தான்.

ஊர்மிளாவை அவள் வீட்டில் இறக்கி விட்டுவிட்டுக் கிளம்பியபோது மனத்தில்



ஒருவர் : நீங்க தயாரித்த படத்துக்கு ''வெள்ளி விழா'' கொண்டாடப் போறீங்களா? படமே நேத்துத்தானே ரிலீசாச்சு?

புது தயாரிப்பாளர் : படம் நேற்று வியாழக்கிழமை ரிலீசாகி இன்று வெள்ளியைத் தாண்டி பிடிச்சிக்கலே!

- பட்டுக்கோட்டை இரவி



ரகசியத்தைக் காப்பாற்றுங்கள்-அது உங்கள் அடிமை. அதை வெளி



யிடுங்கள் - அது உங்கள் எஜமானன்.

-வில்ஹென்றி

-எஸ். ராஜகணேஷ்

உறுதி பிறந்தது. ''இந்த விவகாரத்துக்கு இத்தோடு முற்றுப்புள்ளி வைத்தாக வேண்டும். இல்லையானல், நாராயணசாமி சொன்னது போல நெருப்புடன் விளையாடிய கதைதான். மனம் எச்சரித்தது.

வீடு திரும்பியதும் அவன் கேட்ட முதல் கேள்வி ''அம்மாவுக்கு உடம்பு எப்படி இருக்கு?'' — மாதங்கியிடம்தான். ஆனல் பார்வை சுவரை நோக்கி இருந்தது.

''ரத்த அழுத்தம் சீராகி விட்டதுன்னு டாக்டர் சொன்னர். ஆனல் ஓய்வு தேவைன்னு சொல்லிட்டார்.''

''என்னைப் பத்திக் கேட்டிருப்பாரே. எப்ப வந்தாலும் ஹர்ஷனைக் காணலேயேன்னு விசாரிச்சிருப்பாரே!''

''உம்! கேட்டார். கம்பெனி வேலையா வெளியே போயிருக்கறதாச் சொன்னேன்.''

''ஏன் அப்படிச் சொல்லணும்?''

''குடும்ப டாக்டர். நம்மளைப் பத்தி உயர்வா நெனைச்சிண்டிருப்பவர். அம்மாவுக்கும் பிள்ளைக்குமிடையே மனத்தாங்கல்னு அவர் தவறு நினைக்கக் கூடாதேன்னுதான்.''

''இந்தக் குடும்பத்து மேலே அவ்வளவு அக்கறை உனக்கு'' — ஏளனமாகக் கூறினன் அவன்.

மாதங்கி உதட்டைக் கடித்துக் கொண்டு மௌனமாக நின்ருள். மனத்துக்குள் துயரம் குமுறிக் கொந்தளித்தது.

''இந்த வீட்டு மருமகள் நான். உங்கள் மனைவி. கணவனைப் பற்றியும், குடும்பத்தைப் பற்றியும் ஒரு பெண்ணுக்கு அக்கறை இருப்பது இயற்கைதானே...'' சொல்லத் துடித்தது உள்ளம். ஹர்ஷன் குத்தலாகப் பேசிவிட்டால்....?

''சின்ன வயசிலேயே நான் பெத்தவங்களை இழந்துட்டேன். தாயாரை விட அன்பு காட்டி என்னை ஆதரிக்கிற உங்கம்மாவையும் எனக்குப் பாதுகாப்புக் கொடுத்திருக்கிற இந்த வீட்டையும் நான் ரொம்ப மதிக்கிறேன். மத்தவங்களும் மதிக்கணும்னு எனக்கு இயல்பாகவே அக்கறை உண்டாகியிருக்கு'' என்ருள் மெதுவாக.

''சரி! என்னைப் பத்தி எதுவுமே சொல்லலேயே!'' வேண்டுமென்றே கேட்டுவிட்டு, விஷமமாகப் பார்த்தான் அவன்.

''இந்த வீட்டுக்கு வந்த முதல் நாளே என்னை வெளியேறச் சொன்னீங்க. உங்கம்மா எனக்காகப் பரிந்து பேசி இங்கே இருக்க அனுமதிச்சாங்க. பிறகு... நான் தொடர்ந்து இங்கே இருக்கிறதை நீங்க மறுக்கலே... அதுக்கு என் நன்றி...''

பட்டும் படாமலும் பேசிய அவளது திறமையை அவனல் வியக்காமல் இருக்க முடியவில்லை.

பார்வைக்கு வெகுளிபோலத் தென்பட்டாலும் உள்ளே இவள் அழுத்தமான பேர்வழிதான்! அளந்தல்லவா பேசுகிருள்? கெட்டிக்காரி!

''என்ன படிச்சிருக்கே? பி.ஏ.வா, பி.எஸ்.ஸியா?'' கிண்டலாகக் கேட்டான்.

இதெல்லாம் கேட்கக்கூட விரும்பாத ஆசாமிக்கு.... அவள் மறுக்காமல் பதில் சொன்னுள்.

''என் படிப்புக்கும் வளர்ச்சிக்கும் எங்கப்பா அம்மா பணம் எதுவுமே வைக்கலே. பெரியப்பா தயவிலே வளர்ந்தேன். பி.யூ.சி. வரை படிப்புக் கொடுத்தார்.''

''சங்கீதம்?''

''சமையல் அறையில்தான் அதிகம் உண்டு. பூஜை அறையில் தெய்வங்கள் கோபிச்சுக்கொண்டு போகாத அளவு பாடத் தெரியும்!'' குப்பென்று சிரிப்பு வந்துவிட்டது அவனுக்கு.

பளிச்சென முகம் முழுதும் ஒளி விட்டதைக் கண்டு அவனே பிரமித்துப் போனன். அவன் மன உணர்வுகள் குழைவதை உணர்ந்தான். ''அட சே! இப்போது என்ன ஆகி விட்டது தனக்கு... ஏன் இப்படி ஒரு தடுமாற்றம்? கனமான கல்லைக் கீழே இறக்கிப் போட்டதும் கட்டுத் தடுமாறி நிமிர்வது போல... ஊர்மிளா மீது கசப்பு தோன்றியதும் மாதங்கி மேல் அன்பாக மலர ஆரம்பித்து விட்டதோ!

வாயில் அழைப்பு மணி அழுத்தமாக ஒலித்தது. இருட்டிய பின்பு... அந்த வேளையில் யாராக இருக்கும்!

சட்டென விளக்கைப் போட்டுவிட்டு மாதங்கி வாசற் பக்கம் விரைந்தாள்.

கதவைத் திறந்தபோது வராந்தாவிலே பெரியப்பா தயானந்தும், பெரியம்மா சமதியும் நின்றிருந்தனர்.

''சம்பந்தி அம்மாவுக்கு உடம்பு முடியலேன்னு கேள்விப்பட்டோம். அப்படியே உன்னையும் பார்த்துட்டுப் போகலாம்னு வந்தோம். ஆமாம், உன் புருஷன் எங்கே? கல்யாணமாகி வந்தாலும் வந்தே, பெரியம்மா, பெரியப்பா எல்லாரையும் மறந்தே போயிட்டே. ஒரு போன் பண்ணிக்கூட விசாரிக்கப்படாதா? ஆனு உங்க பெரியப்பா சதா உன்னைப் பத்தித்தான் கவலைப்பட்டுகிட்டே இருக்காரு. ஜயந்திக்குப் பதில் மணையிலே உட்கார்த்தி வச்சுத் தாலி கட்டினமே, மாப்பிள்ளைக்குப் பிடிக்காமப் போயி அந்தப் பெண் அங்கே என்னென்லாம் கஷ்டப்படுறதோன்னு சதா புலம்பல்.''

சமதி கணீரென்று பேசியது ஹர்ஷனின் காதுகளில் ஓங்கி அறைவது போல் விழுந்தது. அவன் கடும் கோபத்துடன் வேகமாய் மாடிப் பக்கம் சென்று விட்டான்! (தொடரும்)

**கா**ரின் குழலோசை எங்கள் வீட்டு வாசலில் கேட்டது.

நாங்கள் லட்சியம் செய்யவில்லை. மாடியில் —பின் கட்டில் — குடித்தனம் இருப்பவர்கள் வீட்டைத் தேடிக் கொண்டுதான் யாராவது வந்திருப்பார்கள். என்னைப் பொறுத்தவரை—காரைப் போட்டுக் கொண்டு — என்னைத் தேடிக்கொண்டு வரக் கூடியவர்கள் யாரும் என் கவனத்துக்கு வரவில்லை.

என் பிள்ளை பாபு வாசலிலிருந்து ஓடிவந்தான். ''உன்னைத்தான் அப்பா தேடிக் கொண்டு வந்திருக்கிறார்கள்'' என்றான்.




வெறும் கைலியை மட்டும் கட்டிக்கொண்டு சுவரில் 'ல'வு வடிவத்தில் சாய்ந்தபடி இருந்த நான் வில்லிலிருந்து விடுபட்ட அம்பு போல் பாய்ந்து எழுந்தேன். பிளாஸ்டிக் கொடியில் கொத்துக் கொத்தாகக் கிடந்த துணிகளிலிருந்து ஒரு சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டு....

''என்ன ராகவா! ஞாயிற்றுக் கிழமை, ஹாய்யா ரெஸ்டா?... எங்கே சீதா?'' என்று அதட்டியபடியே உள்ளே நுழைந்தார் அத்தான் தேவராஜன்.

''வாங்கோ... வாங்கோ'' என்று அடுக்களையிலிருந்து ஓடோடி வந்து உபசரித்தாள் சீதா. அடுத்தபடியாக என்னைப் பார்த்து ஒரு முறை முறைத்தாள். வருபவர்கள் உட்கார நான் 'டீஸெண்டாக' ஒரு சோபா செட் ஏன் வாங்கிப் போடவில்லை என்று அந்தப் பார்வை என்னைக் குற்றம் சாட்டியது.

''நல்ல சமாசாரம்தான்.... என் பிள்ளை பாலாஜிக்குக் கல்யாணம் நிச்சயம் செய்திருக்கிறேன். இந்த மாதம் இருபதாம் தேதி குற்றாலத்தில் கல்யாணம். நீயும் சீதாவும் குழந்தைகளுடன் வந்திருந்து....''

அவர் கொடுத்த அழைப்பிதழை நான் கையில் வாங்கிக் கொண்டேன்.

''நம்ம பாலாஜிக்குக் கல்யாணம்... வராமல் இருப்போமா?...என்று சீதா தன் பெருந்தன்மையை உடனே வெளிப்படுத்தினாள்.

''பத்தொன்பதாம் தேதி காலையில் எங்கள் வீட்டிலிருந்து ஸ்பெஷல் பஸ் ஏற்பாடு செய்திருக்கிறோம். சரியாக எட்டு மணிக்கெல்லாம் வந்து சேர்ந்து விடுங்கள்!'' என்று சொல்லி விட்டு அவர் புறப்பட்டார்.

''ஆகட்டும் அத்தான்!'' என்றேன்.

வாசல் வரை சென்று அவரை வழியனுப்பி விட்டு வந்தால் எதிரே ஒரு நீண்ட வாக்கு வாதத்துக்கு ஆயத்தமாக நின்று கொண்டிருந்தாள் சீதா.

''கல்யாணம் எத்தனும் தேதி?''

''இந்த மாதம் இருபது.''

''குற்றாலத்தில்தானே?''

''ஆமாம்.''

''அவ்விடத்தில் எப்படி உத்தேசம்?.... போவதாகவா?... இல்லை.... இருபத்தைந்து பைசா இன்லண்ட் லெட்டர் வாங்கி ஆபீஸ் டைப்ரைட்டரில் நான்கு வரி வழக்கமான வாழ்த்தை அடித்துப் போடுவதாகவா?''

''அவர் மரியாதைக்காகக் கூப்பிட்டார். நானும் வருவதாகச் சொன்னேன்... எல்லாம் சம்பிரதாயம்... அதற்காக உடனே மூட்டையைக் கட்டிக் கொண்டு போய் நிற்க வேண்டும் என்கிறாயா?..''

சீதாவைச் சமாளிக்க ஒரே வழி: அவள் பேசுவதற்கு முன்பு நாம் படபடவென்று பேசி முடிக்க வேண்டும்.

அந்த உபாயம் இப்போது பலிக்கவில்லை.

''இப்போது குற்றாலத்தில் சீஸன். அவரவர்கள் சொந்தத்தில் செலவு செய்து கொண்டு போய் அனுபவிக்கிறார்கள். ஸ்பெஷல் பஸ்ஸில் கூட்டிக் கொண்டு போகிறேன் என்று ஒருவர் வீட்டு வாசலில் வந்து அழைக்கிறார்.... அப்புறம் என்ன?''

''எனக்கு என்னமோ நாம் எல்லோருமா போய் நிக்கறது சரியில்லை எனப் படுகிறது. நீயும் பெரியவனும் மட்டும்...''

''இதோ பாருங்கள்... போக வேண்டாம் என்றால் நேரடியாகச் சொல்லி விடுங்கள். நான் இந்த வீட்டு வியர்வையில் புழுங்கிச் சாகிறேன். போன வருஷம் என் அண்ணா மச்சினன் திருவனந்தபுரத்திலே.... ஸ்பெஷல் கடிதாக போட்டுக் கூப்பிட்டிருந்தார்கள். போனோமா?...''

"வேண்டாம்.... நாம் எல்லோரும் கல்யாணத்துக்குப் போகிறோம். ஆளை விடு!" என்று எழுந்தேன்.

அதற்குப் பிறகு தினமும் குற்றாலம் பேச்சு தான்.

"என் கஸினுக்குக் குற்றாலத்தில் கல்யாணம்.... நாங்கள் ஸ்பெஷல் பஸ்ஸில் போகிறோம்" என்று எழுதித்தான் மூன்று நாள் லீவு போட்டேன்.

சீதா எங்கள் காலனியிலும் அடுத்த தெருவிலும் பிள்ளையார் கோவிலிலும் தம்பட்டம் அடித்துச் சொல்லாத குறையாக எங்கள் குற்றால விஜயத்தைப் பரப்பினாள்.

அவளும் என் பெண்ணுமாகப் பீரோவில் உள்ள புடவைகளைக் கீழே பரத்திப் போட்டனர். ஜானவாசத்துக்கு — முகூர்த்தத்துக்கு — ரிஸப்ஷனுக்கு — கிருகப் பிரவேசத்துக்கு — பிரயாணத்துக்கு — அருவியில் குளிப்பதற்கு என இரண்டு ஸெட் எடுத்து வைப்பதற்குள் எத்தனை தர்க்கங்கள், எத்தனை ஆட்சேபங்கள்?



அஸ்ஸாம் பிரச்னையெல்லாம் இதற்கு முன் கொசு மாதிரி. ஒரு முடிவுக்கும் வராமல் எல்லாப் புடவைகளையும் பீரோவுக்குள் வாரிப் போடுவார்கள்.

புடவைக்கு ஏற்ற மாதிரி ரவிக்கை இல்லை என்று சீதா கடைக்குப் போய் வந்தாள். போனதுதான் போனோமே என்று வாங்கி வந்த இதர சாமான்களின் விலை — நாங்கள் எல்லோரும் குற்றாலம் போய்த் திரும்பும் பஸ் கட்டணத்தைவிட எவ்வளவோ அதிகம்!

பார்ப்பதற்கு நன்றாக இருக்க வேண்டும் என்று நான் எழுபது ரூபாய்க்கு ஒரு ஸூட்கேஸ் வாங்கினேன். பழைய சாக்லேட் பெட்டியில் குங்குமம், பவுடர் எல்லாம்

கொண்டு போனால் நன்றாக இருக்காது என்று நாற்பது ரூபாய்க்கு ஒரு டாய்லெட் பெட்டி வாங்கிக் கொண்டாள் சீதா.

நாங்கள் இருந்தது திருநகர். அத்தான் இருந்தது ஜவாஹர் நகர். இரண்டுக்கும் இடையே பதினறு கிலோ மீட்டர் தூரம். இரண்டுபஸ்கள் மாறித்தான் போகவேண்டும்!

பதினெட்டாம் தேதி இரவு எல்லாவற்றையும் எடுத்துப் பெட்டிகளில் அடுக்கி நாங்கள் தூங்கப் போகும்போது மணி பன்னிரண்டு. ஒரு மணிக்கு சீதா என்னை எழுப்பினாள்.

''ஜானவாசத்துக்கு என்று எடுத்து வைத்த புடவைக்கு மாட்சிங் ஜாக்கெட் உள்ளே வைக்கவில்லை. கொஞ்சம் பெட்டியைத்திறந்து பாருங்கள்!''

''காலையில் பார்த்துக் கொள்ளலாம். இப்போது தூக்கம் என்னை அசத்துகிறது!'' என்று கெஞ்சினேன்.

''அந்த அவசரத்தில் மறந்துவிடும்.... இப்போது....'' என்று முனகினாள்.

மேலும் விவாதத்தைத் தவிர்க்கத் தட்டிக் கழிப்பதை விட செய்து முடிப்பது சுலபம் என்ற காரணத்தால் பெட்டியைத் திறந்து பார்த்தேன். தேடியது ஒன்றுக்கு இரண்டாகவே இருந்தது. அமுத்துக் கொண்டபடி பெட்டியை மூடி ''ஸ்பிரிங் பூட்டை'' அழுத்தி மூடினேன். அப்புறம்தான் ஞாபகம் வந்தது — சாவிக்கொத்தைப் பெட்டிக்குள் மேலாகப் போட்ட சங்கதி.

லைட்டைப் போட்டுக் கொண்டு எழுந்தேன். ஸ்குரு டிரைவர், தோசை திருப்பி, ஆணி, கோணி ஊசி, (கடப்பாறை நீங்கலாக) எல்லா ஆயுதங்களையும் பரப்பினேன். எப்படியோ பூட்டைத் திறந்து சாவியை எடுக்கும்போது மணி மூன்று. பூட்டு காயலாங் கடைக்குக் கூடப் போகலாயக்கில்லாமல் அக்கு வேறு ஆணி வேறாகக் கிடந்தது. புதிதாக வாங்கிய பெட்டியும் யுத்தத்தில் அடிபட்ட வீரனைப் போல் காட்சியளித்தது.

ஆறு மணிக்குப் புறப்படுவதாக ஏற்பாடு. ஒவ்வொருவராகக் கிளம்பி உபசாரம்செய்து வீட்டுக்கு வெளியே வந்து சேரும்போது மணி ஆறே முக்கால். இரண்டு சிடி பஸ்கள் எங்கள் கோலத்தையும் எங்கள் மூட்டை முடிச்சுகளையும் பார்த்துவிட்டு நிற்காமல் போய் விட்டன. எப்படியோ நாங்கள் ஜவாஹர் நகர் போய்ச் சேரும்போது மணி ஏழே முக்கால்.

அத்தான் வீட்டின் முன்பு பஸ் காத்து நின்றது. ''சொன்னால் சொன்னபடி... நீங்களும் இருக்கிறீர்களே மசமசவென்று!'' என்னைச் சாடியபடி அவர்கள் வீட்டுக்குள் எங்களை அழைத்துச் சென்றாள் சீதா.

நாங்களும் பஸ்ஸில் ஏறினோம். ஆனால் உட்கார இடம் இல்லை. எல்லா இருக்கைகளும் கர்சீப், துண்டு, ஹாண்ட் பேக் ஆகியவற்றால் ரிசர்வ் செய்யப்பட்டிருந்தன. எங்கே போனாலும் விரட்டினார்கள். போதாக் குறைக்குக் கண்டக்டர் வேறு ''உட்கார்ந்தால் உட்காருங்கள் இல்லாவிட்டால் இறங்குங்கள்!'' என்று கையைப் பிடித்துக் கீழே இறக்காத குறையாக விரட்டினார்.

''அத்தானிடம் போய்ச் சொல்லுங்கள்! இப்படியே மசமசவென்று நின்று கொண்டிருந்தால் எப்படி?'' என்று உத்தரவு பிறக்கவே — அதை உடனடியாக நிறைவேற்றினேன்.

''அப்படியா?... நீ கொஞ்சம் முன்னாடி வந்திருந்தால் நீயும் இடம் பிடித்துக் கொண்டிருக்கலாம்... பரவாயில்லை... நேரே பஸ் ஸ்டாண்டுக்குப் போனாயானால் ஒரு மணிக்கு ஒரு பஸ்... இப்போ கூட எட்டேகாலுக்கு ஒன்று இருக்கிறது'' என்று எனக்கு வழி சொன்னார்.

நாங்கள் இறங்கி ஒரு ஓரமாக நின்றோம். சீதா குற்றாலம் வரை ''ஸ்டாண்டிங்''கில் போகக்கூட ரெடி. டிரைவர்தான் ஐம்பத்து நாலு பேருக்கு மேல் ஒரு பொடியனைக் கூட ஏற்ற அனுமதிக்கவில்லை.

பஸ் ஆரவாரத்துடன் புறப்பட்டது. அத்தான் தலையை வெளியே நீட்டி ''கட்டாயம் வந்துவிடு!'' என உரத்த குரலில் உபசரித்து விட்டுப் போனார்.

''சரி, வாருங்கள்... வீட்டுக்குப் போகலாம்!'' என்று அவர்களை அழைத்தேன்.

''வீட்டுக்கா? நான் மாட்டேன்!'' என்று சீதா வேகமாகத் தலையையும் கைகளையும் ஆட்டினாள்.

# ஆடுகள் நனைகின்றன!



டி. வி.யில் வந்த நாடகம். தலைப்புடன் கச்சிதமாய்ப் பொருந்தும் படம். ஒரு சேல்ஸ் கேர்ளின் வாழ்க்கை நிகழ்ச்சிகள். சுற்றியிருப்பவர்கள் எல்லோரும் சுயநலத்துடன் ஒநாய் புத்தியைக் காட்டிவிடுகிறார்கள். ரூபா நாயகி. அதற்குள் சலித்துவிட்ட முகம். சுறுசுறுப்பான அறிமுக நாயகன் பிரசாத். முதல் படமென்ற பயமின்றி ஆடி, ஓடி நடித்திருக்கிறார்.

சாமிக்கண்ணு 'பட்டை', 'தண்ணி' என்றதும் பழைய நினைவுக்குத் தடுமாறுவதும், சுருளியின் சின்ன வீடு மகாத்மியமும் கிச்சு கிச்சு மூட்டுகின்றன. இருந்தாலும் சுருளி கொஞ்சம்... வேண்டாம்.... மறைந்தவரைப் பற்றி இப்ப எதற்கு விமர்சனம்.

சந்திர போஸின் இசை சுவைக்கிறது. பி. என். சுந்தரத்தின் கேமரா உழைக்கிறது. அழகான வெளிப்புறங்களும், அடிக்க வரும் ரோஸ் கலர் செட் இன்டோர் காட்சிகளும் ஒட்டாமல் வதைக்கின்றன.

மாதவன் இன்னும் சிறப்பாகச் செய்திருக்கலாம்.

—ஜனனி சாஸ்திரி

# கராத்தே பயிற்சி 28

பயிற்சியாளர்: டோனி பொன்னையா சித்திரம்: படம்: உத்ரா
தயாரிப்பு: குன்றுமணி





## THROWS

கராத்தே கலையில் உதைத்தல், குத்துதல், வெட்டுதல் இவைகளோடு தூக்கி வீசும் முறையும் ஓரளவு கற்றுக் கொண்டால் தற்காப்புக்கு மிகவும் உதவும். படத்தில் பின்புறம் தாக்க வருபவரை எப்படித் தூக்கி வீச வேண்டும் என்பதைக் காணலாம்.

ஒருவரைத் தூக்கிப் போடும்போது நாம் நன்கு Horse Riding Stance நிலையில் அமர்ந்து தூக்கிப்போடுவது சாலச் சிறந்தது!

---

''நாங்களும்தான்!'' என்று கோரஸ் பாடினர் குழந்தைகள்.

போஸ்டர் ஒட்டாத குறையாக எல்லோரிடமும் குற்றாலம் போவதாகவும் திரும்ப மூன்று நாள் ஆகும் என்றும் சொல்லிவிட்டு வந்திருக்கிறார்களாம். இப்போது வீட்டுக்குப் போனால் அவமானமாம். வெளியே தலை காட்ட முடியாதாம்.

''குற்றாலம் போகா விட்டாலும் பரவாயில்லை.... எங்காவது இருந்து விட்டு மூன்று நாட்கள் கழித்த பிறகுதான் வீடு போக வேண்டும்!'' என்றாள் சீதா.

''சரி... பத்து மணிக்கு மேல் குற்றாலம் போகலாம்!'' என்றேன்.

''அது என்ன முகூர்த்தம்?.... பத்து மணிக்கு மேலேன்னு...''

''ஆமாம்.... பாங்க் முகூர்த்தம்...பத்து மணிக்கு மேலே இரண்டு மணிக்குள்... கையிலே ரூபாய் வேண்டாமா?'' -- அவள் புரிந்து கொண்டாள்.

ஒரு ஹோட்டலில் காலை ஆகாரத்தை முடித்துக் கொண்டோம். அவர்களைப் பஸ் நிலையத்தில் நிற்க வைத்து நான் மட்டும் திரும்பி வந்து பாஸ் புத்தகத்தை வீட்டிலே தேடி எடுத்துக் கொண்டு, பணம் வாங்கி வந்தேன். கடைசியாகப் பத்தே முக்கால் பஸ்ஸில் எங்களுக்கு இடம் கிடைத்து ஏறி உட்கார்ந்தோம்.

எல்லோரும் போய்ச் சாப்பிட்டுத் தூங்கிய பிறகு – நாங்கள் பெருத்த அசதியுடன்– கசங்கிய உடையுடன், கலைந்த தலையுடன்– போய் நிற்கப் போகிறோம். தங்கவாவது இடம் கிடைக்கிறதோ இல்லையோ... எத்தனையோ பிரச்னைகள்.

எங்கள் ஒருவர் முகத்திலாவது உற்சாகம் இல்லை. தெம்பு இல்லை.

''மாமா!'' என்று குரல் கேட்டது.

நிமிர்ந்து பார்த்தேன்.

பாலாஜி – மாப்பிள்ளை.

''நீ எங்கே இங்கே?'' என்றேன் வியப்புடன்.

''அப்பா போற இடத்துலே எல்லோரையும் கூப்பிட்டிருக்கா. அம்மாவும் அதே மாதிரி... இப்போது குற்றாலம் சீஸன் இல்லையா? அத்தனை பேரும் குடும்பத்துடன் வந்து விட்டார்கள். இரண்டு பஸ் வைத்தால் கூடப் போதாது. என் முக்கியமான சிநேகிதர்களுக்குக்கூட இடம் இல்லை. அவர்களை எப்படித் தனியாக வரச் சொல்வது? நானும் அவர்கள் பின்னால் தங்கி விட்டேன்!'' என்றான்.

நாங்கள் நிமிர்ந்து உட்கார்ந்தோம். ஏமாற்றம் அயர்ச்சி எல்லாம் மாயமாய் மறைந்தன. இப்பொழுது நாங்கள் கௌரவமான – வரவேற்கத் தக்க விருந்தினர்கள். மாப்பிள்ளையுடன் போய் இறங்கப் போகும் வி.ஐ.பி.!

சீதாவின் முகமெல்லாம் பல்லாயிற்று!

# டி.வி. பார்த்துக் கொண்டிருந்தபொழுது!

''வீட்டில் டி.வி பார்த்துக் கொண்டிருந்தபொழுது நடைபெற்ற சுவையான சம்பவங்கள் ஏதாவது இருந்தால் சொல்லுங்களேன்'' என ஐந்து பேரைக் கேட்டபோது...

**திருமதி சௌந்தரம் ராமசாமி, சென்னை - 17**

● என் மகன் கண்ணன் டெல்லியில் இந்தியன் ஆயில் கம்பெனியில் வேலை பார்த்து வருகிறான்.
திருமணத்துக்குப் பெண் பார்க்க அவனை டெல்லியிலிருந்து வரவழைத்தோம்.
தனித்தனியாக இரண்டு வரன்களைப் பெண்பார்க்க ஏற்பாடு செய்திருந்தோம்.
அவனோ வந்ததும் வராததுமாக ''நான் இரண்டு பெண்களையும் பார்க்க மாட்டேன்.
எந்தப் பெண்ணைப் பார்க்கிறேனோ அவளையே திருமணம் செய்துகொள்ள
வேண்டும். பெண் பார்த்துவிட்டு யாரோ ஒருத்தியைப் பிடிக்கவில்லை
என்று சொன்னாலும் அவள் மனம் வேதனைப்படும்'' என்று
கண்டிப்பாகக் கூறிவிட்டான்.
அடுத்த நாள் அவனை யாரைப் பெண் பார்க்க வைக்கிறது என்று குழம்பிக்கொண்டிருந்தோம்.
அன்று இரவு சாப்பிட்டுவிட்டு அனைவரும் டி. வி. பார்த்துக் கொண்டிருந்தோம்.
கல்லூரி மாணவிகள் பங்கு கொள்ளும் 'க்விஸ்' ப்ரோக்ராம் அது.
எதிர்பாராத விதமாக நாங்கள் பார்த்து வைத்திருந்த
பெண்களுள் ஒருத்தியும் நிகழ்ச்சியில் பங்கு கொண்டிருந்தாள்.
டி. வி. யில் தனியாக அவளை அறிமுகப்படுத்தும்பொழுது கண்ணனிடம்
அவளைக் காட்டினேன்.
கண்ணன் நிகழ்ச்சியில் அந்தப் பெண்ணைப் பார்த்துவிட்டுத் தனது அதிருப்தியான பதிலைத்
தெரிவித்து விட்டான்.
எனக்கு அது ஏமாற்றமாக இருந்தாலும் எங்களுடைய பிரச்னைக்கு
முற்றுப்புள்ளி வைப்பதாக இருந்தது.
மற்றொரு பெண்ணை மறுநாள் பார்த்து அவன் விருப்பப்படியே திருமணம் செய்துகொண்டு
இன்று குடித்தனமும் நடத்தி வருகிறான் கண்ணன்.

**திருமதி நீலா ரகுவீர், சென்னை 33**

● என் மகள் ப்ரியாவுக்குப் பள்ளியில் நடைபெறும் மாறுவேடப் போட்டிக்கு நிகழ்ச்சி ஏதாவது
தயார் செய்து தரவேண்டும்.
என்ன செய்வதென்று குழம்பிக் கொண்டிருந்தோம்.
அன்று டி. வி.யில் ''பூம்புகார்'' படம் இருந்தது. படம் பார்த்துக் கொண்டிருந்தபொழுது
திடீர் என்று நினைத்துக்கொண்டு என் கணவர் அவசரம் அவசரமாக டேப்
ரிகார்டரை எடுத்து இணைத்தார். கண்ணகி கால் சிலம்பை ஏந்தி
மதுரை மன்னன் முன்பு ஆவேசமாகப் பேசும் காட்சி வந்தது.
அக்காட்சியின் முழு வசனங்களையும் டேப்செய்தார்.
அடுத்த நாள் அந்த டேப்பைப் போட்டுக் காட்டி ப்ரியாவைக் கண்ணகி வேடத்துக்குத்
தயார் செய்து விட்டோம்.
மறுநாள் பள்ளியில் அதே காட்சியைப் பேசி, நடித்துக் காட்டி
இரண்டாவது பரிசு பெற்றுவிட்டாள் ப்ரியா.

✖ திருமதி ரெஜினா பேகம் முகம்மது சாலிஹ்



✖ திருமதி சௌந்தரம் ராமசாமி



✖ திருமதி நீலா ரகுவீர்



✖ திருமதி பத்மாவதி சீனிவாசன்





✖ திரு ஆர். ராமதுரை

மீண்டும் 'ஸ்பிக்' கல்சுரல் அசோஸியேஷனிலும் அதே காட்சியை நடித்துக் காட்டி எவர்சில்வர் அடுக்கைப் பரிசாகப் பெற்று விட்டாள்.

**திருமதி பத்மாவதி சீனிவாஸன், சென்னை - 33**

● போக் ரோடிலுள்ள என் நாத்தனார் ஜெயலட்சுமி வீட்டுக்கு நானும் என் கணவரும், எப்போதாவது டி.வி. பார்க்கப் போவதுண்டு. அன்று ''நிறம் மாறாத பூக்கள்'' படம் பார்த்துக் கொண்டிருந்தோம். இடையே செய்திகள் வாசிக்கப்பட்டன. திருப்பதிக்குப் போய் வந்துகொண்டிருந்த பஸ் ஒன்று விபத்துக்கு ஆளானது குறித்துச் சொல்லப்பட்டதும் நானும் அவரும் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்துவிட்டோம். காரணம் எனது இன்னொரு நாத்தனார் பையன் வாசுதேவன் திருப்பதிக்குப் போனவன் அன்று அந்த பஸ்ஸில் திரும்ப வேண்டும். அலறிப் புடைத்துக் கொண்டு வாசுதேவன் வீட்டுக்கு டாக்ஸி பிடித்து விரைந்தோம். வழி நெடுகிலும் என்னென்னவோ கற்பனைகள். வீடு வந்தது. டாக்ஸிக்குப் பணம்கூடக் கொடுக்காமல் உள்ளே நுழைந்தால்.. அங்கே வாசுதேவன் முடியிறக்கப்பட்ட தலையுடன் அமர்ந்திருந்தான். எங்களுக்குப் போன உயிர் வந்தது.

**திருமதி ரெஜினா பேகம் முகம்மது சாலி..ப்**

எங்கள் வீட்டு கீழ் போர்ஷனில் 'அன்பே ஆருயிரே' படம் பார்த்துக் கொண்டிருந்தோம். சிவாஜி கணேசன் மஞ்சுளாவிடம் நீண்ட நேரம் பேசிக்கொண்டிருக்கும் காட்சி அது. என் ஏழு வயதுப் பையன் பக்கீர் திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டு ''எம்மா! படத்திலே வர்ற இந்த அப்பா, அந்த அம்மாகிட்டே கொஞ்சமாட்டாரா? பேசிண்டே இருக்காரே'' என்று சொன்னதும் டி.வி. பார்த்துக்கொண்டிருந்த அனைவரும் 'கொல்'லென்று சிரித்துவிட்டனர்.

**திரு ஆர். ராமதுரை**

● என் ஐந்து வயதுச் சிறுமி மைதிலி படத்தில் சண்டைக் காட்சிகள் வந்தால் போதும், கண்களை இறுக மூடிக்கொண்டு என் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு அடுத்த அறைக்குள் ஓடிவிடுவாள். குழந்தை பயப்படுகிறாளே என்று நினைத்து நானும் அவளோடு உள்ளே போய்ச் சண்டைக் காட்சி முடிந்ததும் சமாதானப்படுத்தி அழைத்து வருவேன். அன்று 'அன்புக்கு நான் அடிமை' படத்தைப் பார்த்துக் கொண்டிருந்தோம். ரஜினியும் கராத்தே மணியும் சண்டை போடும் காட்சி வந்ததும் வழக்கம் போல என்னைத் தரதரவென்று இழுத்துக் கொண்டு உள்ளே போனாள் மைதிலி. அந்தக் காட்சி முடிந்ததும் வழக்கம்போல என் கையைப் பிடித்து டி. வி. உள்ள ஹாலுக்கு அழைத்து வந்தாள். அன்று சில விருந்தினர் இருந்தனர். அவர்களைப் பார்த்ததும் ''எம்பா சினிமாவிலேதானே சண்டை போடறாங்க. இதுக்குப் போயி இப்படிப் பயந்து ஒளிஞ்சிண்டிருக்கயே'' என்று கேட்டு என்னை மடக்கி விட்டாள். வழக்கமாக நான் சொல்லும் சமாதானத்தை அவள் என் பக்கம் திருப்பிவிட்டு நாலு பேர் முன்னிலையில் சமாளித்த விதம் எப்படி?

பேட்டி: திரைஞானி



பேட்டிங் செய்யும் நாளன்று எதையாவது புதியதாக அணிந்து கொள்ள வேண்டும். குறைந்தது ஷூக்களின் கயிறாவது புதியதாக இருக்கும்.

இப்படி நமது கிரிக்கெட் வீரர்களில் ஒருவருக்கு ஒரு பழக்கம்.

அந்தக் கிரிக்கெட் வீரர், **சுனில் கவாஸ்கர்!**

—வீக் எண்டிலிருந்து —சேலம் தர்மசக்ரா

# தாகம் தணிந்தது!



அர்ஜுனன் தன் வில்லாற்றலால் நீரை ஊற்றாகப் பெருகச் செய்தான் என்று படித்திருக்கிறோம். அதை நம்புவதற்குச் சிறிது கஷ்டப்படுகிறவர்கள், சென்ற மாத இறுதியில் ஒரு நாள் லால்குடி திரு ஜெயராமன் தமது வில்லினால் செய்த அற்புதத்தைக் கண்டிருந்தால் வில்லினால் எதை வேணுமானாலும் சாதிக்கலாம் என்ற முடிவுக்கே வந்திருப்பார்கள்! வயலின் இசை ஊற்று அன்று பெருகி பம்பாய்த் தமிழர்களின் இருவித தாகங்களைத் தணித்தது. நல்ல கர்நாடக சுத்தமான சங்கீதத்துக்கு அவர்களுக்குள்ள வற்றாத தாகம் தணிந்தது. இரண்டாவதாக, அவர்கள் ஆசையுடனும் பக்தியுடனும் உருவாக்கியுள்ள சங்கர மடத்தின் கட்டிட நிதிக்குப்பொருளாதாரதாகமும் இந்த உதவிக் கச்சேரியால் தணிந்தது!

ஸ்ரீ ஜெயராமன் அன்று அமைத்துக்கொண்டிருந்த நிகழ்ச்சி நிரல் பம்பாய்த் தமிழர்களின் சங்கர பக்தியை அப்படியே பிரதிபலிப்பதாய் இருந்தது. சாகித்தியங்கள் பல ஏதேனும் ஒரு விதத்தில் ஆதிசங்கரருடன் தொடர்புடையதாக அமைந்து சதா அவரையும் அவர் வழிபட்ட ஷண்மத தெய்வங்கள், ஸ்தாபித்த மடங்கள் ஆகியவற்றையும் உள்ளத்தில் இருத்தி மெய் சிலிர்க்கச் செய்தன.

இந்த அரிய அனுபவத்தைப் பெற்ற பம்பாய் வாசிகளுக்குக் கூடவே ஒரு கவலை! ''அடடா! இத்தனை அற்புதமாக அமைந்து விட்ட இந்தக் கச்சேரி காற்றிலே பிறந்து, காற்றிலேயே மறைந்து விடப் போகிறதே!'' என்ற அவர்கள் ஏக்கத்துக்கு அவசியமில்லை என்று அபயமளிக்கும் விதமாக அன்றைய ஷண்முகானந்தா அரங்கு கச்சேரியை எச். எம். வி. ஸ்தாபனத்தினர் 'டேப்' செய்து விட்டனர். அதனை எல். பி. இசைத் தட்டுக்களாகப் பதிவு செய்து விரைவில் வெளியிட இருக்கின்றனர். ஸ்ரீ ஜெயராமன் இந்த எல். பி. இசைத் தட்டுக்களின் ராயல்டி தொகையையும் பம்பாய் சங்கர மட கட்டிட நிதிக்கே வழங்கி விட்டார் — முழுமையாக.



கர்நாடக சங்கீதமும் இறையுணர்வும் போல ஜெயராமனுடன் மகன் கிருஷ்ணன் இழைந்து வாசித்தார்.

தனி ஆவர்த்தனம் என்பது கச்சேரியின் இடைவேளை என்ற நிலையை மாற்றி அமைக்க ஒரு சில லய வித்வான்களால்தான் முடியும். காரைக்குடி மணியும் வினாயகராமும் அன்று மாறி மாறி வாசித்த போது ரசிகர்களில் ஒருவர்கூட இருந்த இடத்தை விட்டு அசையவில்லை என்பது மட்டுமல்ல, இடையில் பல சந்தர்ப்பங்களில் கரவொலி எழுப்பினர்.

இரண்டாவது தினம் குமாரி பத்மா சுப்பிரமணியத்தின் கம்ப ராமாயண நாட்டிய நாடகம். இதுவும் பம்பாய் சங்கர மடத்துக்கு நிதி திரட்டத்தான்.

கம்பனின் கவிதைகளைப் பொருளுணர்ந்து படித்து வரும் போது நம் மனக் கண் முன்னால் ஒரு வண்ணப்படம் விரிந்து வரும். ராமாயணக் கதா பாத்திரங்கள் பல நாள் பழகியவர்கள் போல் நம்முடன் உறவாடுவார்கள். பத்மா சுப்பிரமணியமோ நாம் கற்பனையில் மட்டும் பார்த்து உறவாடிய கதா பாத்திரங்களை உயிர்த் துடிப்புடன் கண்ணுக்கு மெய்யாகக் கொண்டு வந்து விடுகிறார்!

பரத நாட்டியம் தவிர மற்ற நடன பாணிகளையும் அளவாகச் சேர்த்துக் கொள்வதிலாகட்டும் காவியத்திலிருந்து நாட்டிய நாடகத்துக்கு ஏற்ற பகுதிகளைத் தேர்ந்தெடுப்பதிலாகட்டும் பத்மாவின் ரசனை உணர்வு நாட்டிய நாடகத்தில் பிரதிபலித்தது.

நடனத்தில் தம்மை இழந்து ஸ்ரீமதி சியாமளா பாலகிருஷ்ணன் பாடுகிறாரா அல்லது சியாமளாவின் இசையில் மெய்மறந்து குமாரி பத்மா ஆடுகிறாரா என்று புரியாத அளவுக்கு உயர்ந்த கலை நிகழ்ச்சி.

—ஜெயா வேங்கடேசன்

# ஹைஜாக்

அந்த டகோடா விமானம் வெகு உயரத்தில் பறந்துகொண்டிருந்தது. உள்ளே பத்துப் பயணிகள். காப்டன் ரொஸாரியோ... துணைக்கு ஆண்டர்ஸன்.

டேக் ஆப் ஆக அவர்கள் அவசரப்படுத்திய நேரத்தில் நிகழ்ந்தவற்றை ஒரு முறை நினைத்துப் பார்த்தான் ரொஸாரியோ.

''இவனை எங்கேயோ பார்த்திருக்கிறேன் ஆண்டர்ஸன் — வெகு அருகில், நெருக்கமாக...''

''என்ன பாஸ்! இதுவும் கண்ணிலே பட்டாச்சா?'' என்று விஷமமாய்க் கேட்கிற மாதிரி சிரித்தான் ஆண்டர்ஸன்.

''ஆண்டர்ஸன்! வழக்கத்துக்கு மாறாக எனக்கு என்னமோ இன்று நெர்வஸாக இருக்கிறது. நான் உன்னை நம்பித்தான் இந்த பிளைட்டிலே வரேன்...பார்த்துக்க.''

''கவலையை விடு பாஸ்! சின்ன ட்ரிப்தான்· என்னவோ நமக்குத் திடீர் கிராக்கி. ரெகுலர் ஏர்லைனர் மெக்கானிகல் டிரபிள்லே நின்னு போச்சு. நமக்கு அவசர சான்ஸ்...''

''மணி இப்பவே நாலரையாச்சு. இன்னும் ரெண்டு மணி நேரம். வெளிச்சம் சரியாப் பரவறதுக்கு முந்தியே லாண்ட் ஆயிடலாம், இல்லியா?''

ரொஸாரியோ ரொம்பவும் களைத்துப் போயிருந்தான். என்னவோ ஒரு குறுகுறுப்பு. பாக்கெட்டிலிருந்து பயணிகள் பட்டியலை எடுத்து மறுபடியும் பார்த்தான். பத்துப் பேரில் மூன்று பெண்கள். ஒருத்தி கிழவி.

ஜெனிஃபர், லீலா, வீனு... இந்த மூன்று பேரில் யார் கிழவி? ஜெனிஃபர்தானா?

''ஆண்டர்ஸன் கொஞ்சம் இங்கே வா. கண்ட்ரோலைப் பிடி. நான் ஒரு ரவுண்டு பாசஞ்சர்ஸ் பக்கம் போய் வரணும்.''

லேசாகச் சிரித்துக் கொண்டே காபினுக்குள் நுழைந்தான் ஆண்டர்ஸன்.

''ஆர் யூ, மிஸ் ஜெனிஃபர்?''

கிழவி தலையை அசைத்து ஆமாம் சொன்னாள். குருட்டுப் பூனையும் மிகச் சரியாய் விட்டத்தில் தாவிவிட்டது. லேசாய்ச் சிரித்துக்கொண்டான்.

அடுத்து வீனு, லீலா—

அவசரக்காரன் இந்த ஆண்டர்ஸன். அவனுடைய அழைப்பை ஏற்று காபினுக்குத் திரும்பியபோது, சின்னதான அந்த டகோடா—விமானம் பேய்த்தனமாக ஆடியது.

இருக்கையில் அமர்ந்து விமான நிலைமையைச் சோதித்துவிட்டு ஆண்டர்ஸனை வெளியே அனுப்ப முனைந்தான்.

''யேய்! ஒரு சின்ன உதவி... யார் அந்த லீலா... அதை மட்டும் விசாரிக்க...''

''ஓ.கே'' என்றான் ஆண்டர்சன். ஆனால் நின்ற இடத்தை விட்டு நகரவில்லை.

இவனை எவ்வளவு தூரம் நம்பலாம்? 'பாஸ்' என்று நூறு தடவை கூப்பிட்டாலும்...

அந்நிய மண்ணில் வந்து அந்தத் தனிப்பட்ட விமானக் கம்பெனியில் சேர்ந்தபோதே நண்பர்கள் எச்சரித்தார்கள். ஆண்டர்ஸனைத் தேடி யார் யாரோ வருகிறார்கள். ரகசியமாய்ப் பேசுகிறார்கள்....

அவனுடைய மனசின் நெருடலைப் புரிந்து கொண்ட மாதிரி ஆண்டர்ஸன் பேசினான்.

சுப்ரபாலன்



''பாஸ்... இனிமேல் விமானத்தை என் விருப்பப்படி ஓட்ட வேண்டும்...புரிகிறதா?''

கடைக்கண்ணால் சற்றே திரும்பிப் பார்க்க முயன்றபோது ஆண்டர்ஸனின் துப்பாக்கி முனை 'அவனுடைய கழுத்தைத் தொட்டுக் கொண்டிருந்தது.

''முட்டாளே! என்ன விளையாட்டு இது?'' என்று ரொஸாரியோ வெடித்தான்.

''எனக்கு விளையாடவே நேரமில்லை பாஸ். வலது பக்கம் திருப்பி எங்காவது வசதியாகத் தரையிறக்கி விட்டால் நீ ரொம்பவும் புத்திசாலி... எங்கே செய் பார்க்கலாம்...''

அவன் திரும்பிப் பார்த்துப் பயணிகளை அழைக்க முயன்றான்.

''முட்டாள் ரொஸாரியோ! நான் ஒன்றும் அமெச்சூரில்லை. கதவுகளை அடைத்தாயிற்று. உன்னால் பயணிகளுடன் பேச முடியாது.''

சற்று நேரம் முன்னால் ரொஸாரியோ காபினை விட்டு வெளியேறியபோது ஆண்டர்ஸன் எல்லா ஆயத்தங்களையும் செய்து முடித்திருந்தான். மைக்ரோ போன் இணைப்புக்களை அகற்றியிருந்தான். கண்ட்ரோல் தொடர்புகளும் இல்லை. கடவுளே— என்று அடித்துக் கொண்டாலும் காப்பாற்ற ஆள் இல்லை.

என்ன ஆயிற்று இந்த ஆண்டர்ஸனுக்கு?

''என்ன யோசனை... சீக்கிரம் தரை இறக்கு. ஆட்கள் வந்து 'அவனைக்' கொத்திக்கொண்டு போகிறவரை நீ என் கைதி... நண்பனே... புரிகிறதா?''

யார் அந்த 'அவன்?' பட்டியலின் பெயர்களை நினைவுபடுத்திப் பார்த்தான். பெண்களின் பெயர்கள் மாதிரி இவர்களின் பெயர் எங்கே நினைவில் பதிகிறது?

கீழே அட்டகாசமான மலை முகடுகள்... பனிப் படலங்கள். எங்கே வட்டமடித்தாலும் டகோடா தூளாகி விடும் என்கிற நிச்சயம்.

சற்றே திரும்பிப் பார்த்தான். கொஞ்சமும் பதற்றமடையாமல் துப்பாக்கி முனையை நளினமாய் வருடியபடி நின்று கொண்டிருந்தான் ஆண்டர்ஸன்.

''பாஸ்! உன்னை எனக்கு வெகு நன்றாகத் தெரியும். நீ இராணுவத்தில் இருந்தவன். இது போல் எத்தனை பனிமலை முகடுகளை நீ பார்த்திருப்பாய். அதுவும் இந்த டகோடா உனக்குக் குழந்தை மாதிரி. நீ சொன்னபடியெல்லாம் கேட்கிற சமர்த்துக் குழந்தை. எங்கே கீழே வட்டமடித்துப் பார்த்து...''

இருள் நன்றாய்ப் பிரிந்துவிட ஒரு மலைச் சரிவுக்கு மேலே அந்தக் குழந்தை வட்டமிட்டது. ஆண்டர்ஸன் சொன்னது நிஜம் தான். பனி முகடுகள், சரிவுகள் எல்லாம் அவனுடைய குழந்தை விளையாட்டுக் களங்கள்தான்.

**ப**யணிகள் ஒருவர் மீது ஒருவர் மோதிக் கொண்டார்கள். நிலைகுலைந்தார்கள்.

அந்தக் கிழவியின் கைப் பையிலிருந்து சில பொருள்கள் விமானத்தினுள் பறந்து சிதறின.

''என்ன பண்ணுகிறான் அந்த இடியட்?'' என்று கூச்சல் போட்டுக் கொண்டே தள்ளாடி எழுந்து வந்து காபினின் கதவை இழுக்க முயன்றார் ராபின்ஸன்.

''அந்த ஏர் லைனரில் எந்தக் கோளாறுமில்லை. வேண்டுமென்றே அங்கே தரையில் இறக்கிவிட்டு இந்தப் பிரைவேட் பிளேனில் என்னை அனுப்பும்போதே சந்தேகப்பட்டேன்...ஏதோ சதி நடக்கிறதென்று...''

ராபின்ஸன் காபின் கதவை இடிப்பது பயனற்றது என்பதை உணர்ந்த இன்னொருவர் தம்முடைய கைத் துப்பாக்கியின் விசையை முடுக்கித் தாழ்ப்பாளைத் தகர்த்துக் கதவைத் திறந்தார்.

துப்பாக்கி வெடி ஓசையைக் கேட்டுக் கதவுப் பக்கம் ரொஸாரியோ சற்றே திரும்ப— தரையில் இறங்கிய விமானம் ஏதோ ஒரு கல் முகட்டில் கிறிக் குடை சாய—

மனிதர்களின் பேரிரைச்சல்கள்... ஒரு சின்ன விபத்து நாளை செய்தித் தீனிக்கு இரை போடத் தயாராயிற்று.

துப்பாக்கிக் கலாட்டாவில் கவனம் சிதறாமல் இருந்திருந்தால் அந்த டகோடாவைப் பத்திரமாகத் தரையிறக்கியிருக்கப் போதுமான சமவெளிதான் இது.

ஆனால் இப்போது... விமானத்தின் காபின் பூரணமாய்ச் சிதைந்து போனது. அரைகுறையாய்த் திறந்த கதவில் சிக்கிக் கொண்டு—

ஆண்டர்ஸன் முடிந்து போயிருந்தான். அதிசயமான முறையில் காப்டன் வெளியே தூக்கி எறியப்பட்டுக் கிடந்தான். அவனுக்கு ரொம்பவும் இலேசான அடி. சின்னச் சிராய்ப்புக்கள்.

படபடப்பு நீங்காதவனாக காப்டன் எழுந்திருக்க முயன்றான். அருகே வந்து நின்ற ராபின்ஸன் அவனுக்குக் கைகொடுத்து, மெல்ல எழுப்பி நிறுத்தினார்.

''என்ன மேன்! கலாட்டா எல்லாம் முடிஞ்சுதா? ஒன்றோட ஆளைச் சேர்த்து நாலு பேர் குளோஸ்... தெரியுமா?''

ரொஸாரியோ மண்டையில் விண்ணென்று வலித்தது. சற்றுத்தொட்டுப் பார்த்தான். பின் மண்டையில் ரத்தம் கசிந்து அவனுடைய கையை ஈரப்படுத்தியது.

''ஆ... மிஸ்டர்....?''

''ராபின்ஸன்:... பயணிகள் பட்டியல் வைச்சிருக்கியா?'' — அவர் கேட்டார்.

பையைச் சிரமப்பட்டுத் துழாவி அதை எடுத்தான்.

''யார் அந்த 'அவன்?' ஒருவேளை இந்த ராபின்ஸன்தானா?''

புருவத்தை உயர்த்தினார் ராபின்ஸன். காப்டன் சுருக்கமாய்ச் சொன்னான்:

''யாரோ ஒரு ஆளுக்காகத்தான் இந்த ஆண்டர்ஸனுல் விமானம் ஹைஜாக் செய்

---



ஒருவர்: இது உங்க முதல் பயணமா?

மற்றவர்: இது என் முதல் பயணமா இல்லை கடைசிப் பயணமா என்பது விமானம் பத்திரமாகத் தரையில் இறங்கிய பின்தான் சொல்ல முடியும்.

- லலிதா செல்லப்பா

யப்பட்டது. அவன் சொன்னுன், இங்கே விமானம் இறங்கியதும் அந்த 'அவனை'ப் பிடித்துப் போக சிப்பாய்கள் வருவார்கள் என்று. ''அவன்'' தப்ப முடியாது என்று.''

ராபின்ஸன் இன்னும் மற்றவர்கள்—அந்தப் பெண்கள் எல்லோரும் காயமுற்றோருக்கு முதல் உதவியில் ஈடுபட்டார்கள். ரொய்ப்புக் கறைத் துடைத்து மருந்திட்டு—

''ரொஸாரியோ! உனக்கு இந்தச் சதியிலே நிச்சயமாய்த் தொடர்பு இல்லே. நம்பறேன். யாரைப் பிடித்துப் போவதை இலகுவாக்குவதற்காக விமானத்தை இங்கு இறக்கச் சொன்னுன் ஆண்டர்ஸன்? யார் அந்த ஆள்... அதுதான் அவசியம்...இல்லேயா?''

ரொஸாரியோ வீனுவை மறுபடியும் பார்த்தான். அவனுக்குள் ஏதோ மின்னியது. மீண்டும் அதே நினைவு. ''இவளை நான் எங்கேயோ நெருக்கமாகப் பார்த்திருக்கிறேன்.''

பொழுது நன்ருய் விடிந்து விட்டது. அந்த விமானத்தைத் தேடி வருவார்கள் இந்த இடத்துக்கு. அந்த ஒருவனைப் பிடித்துப் போவதற்கு வருவார்கள்.

ஆண்டர்ஸன் சொன்ன ஆட்கள் வந்து வளைத்துக்கொண்டு விட்டால் அந்த 'அவனை' மட்டும் பிடித்துப் போவார்களா அல்லது மற்றவர்களுக்கும் உதவுவார்களா? ஒரு வேளை இந்த அத்துவானக் காட்டில் காயம் பட்டவர்கள், தப்பியவர்கள் எல்லோரையும் தவிக்க விட்டுப் போய்விடுவார்களோ? பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்.

''நீ வீனு இல்லே... நிச்சயமாய்.. யார் நீ? உண்மையைச் சொல். உன்னை வைத்துத் தானே இவ்வளவும் ஆயிற்று?'' ரொஸாரியோ மிரட்டிப் பார்த்தான். அவளும் மிரள்கிற மாதிரி பார்த்தாள். சிரித்தாள்.

''நிச்சயம் நான் வீனு இல்லே போதுமா? என் பெயர் எலிஸா. ஆனால் நீங்கள் குறிப்பிடுகிற 'அவன்' யார் தெரியுமா?''

''நான்தான் காப்டன்... நானேதான்'' மிகவும் கம்பீரமாக அவனுடன் கை குலுக்கினர் ராபின்ஸன். தமது உண்மைப் பெயரைச் சொன்னர்.

அதிர்ந்தான் ரொஸாரியோ. ''நீங்கள்?.. உண்மைதானு? ஜனதிபதி மார்லோ...''

''யெஸ்... மார்லோதான். இராணுவப் புரட்சிமுடிந்து ஐந்து வருடங்கள் சிறையில் கிடந்து பிறகு வெளி நாட்டுக்குத் தப்பி ஓடி இன்று திரும்பி மக்களுக்குத் தலைமை தாங்க நினைக்கிறேன். சர்வாதிகாரமா ஜனநாயகமாங்கிற கேள்விக்குச் சீக்கிரமே விடைகிடைக்கும்.... இப்போ நாடு கொந்தளிப்பிலே கிடக்கு. ராணுவ ஜெனரல் ஆட்சியிலே இங்கே எல்லாமே பாழாயிடுச்சு. ஜனங்களுக்கு ஜனநாயக தாகம் இருந்தாலும், துப்பாக்கியைச் சந்திக்கப் போதுமான துணிவில்லே. அதை நான் ஊட்டியாகணும்.''

அவ்வளவு பரபரப்பான நேரத்திலும் நிதானமுடன் இருந்தார் மார்லோ. அவர் மறுபடியும் ஜனதிபதியாகும் நாள் வெகு தொலைவில் இல்லை என்று உறுதியாக நம்பினன் ரொஸாரியோ.

பத்து ஆண்டுகளுக்கு முன்னுல் அவர் வேறும் மார்லோவாக இருந்தபோது....



ஊழல்களை விசாரிப்பதற்கு அரசு பல கமிஷன்களை நியமித்திருக்கிறது. இந்த கமிஷன்களெல்லாம் சரியாக வேலை செய்கிறதா என்று பார்ப்பதற்கு இன்னொரு கமிஷனை நியமித்தால் என்ன?

('சன்டே' கடிதம்) -அனிதா ராமச்சந்திரன்

அவருடைய பெண் எலிஸாவுடன் கல்லூரியில் சேர்ந்து படித்திருந்தான். நட்பு காதலாக மலரும் என்று எதிர்பார்க்கவும் செய்தான். ஆனல் சீக்கிரமே அவள் எட்டாப் பழமாகி விட்டாள். மார்லோ வளர்ந்து புகழ் பெற்று, ஜனதிபதியாகி... மீண்டும் தூக்கி எறியப்பட்டு....

சர்வாதிகாரிகளுக்கும் ஜனநாயகவாதிகளுக்கும் இடையே நிரந்தரமான போர்தான். மார்லோ மறுபடியும் ஜனதிபதி ஆக வர வேண்டும். வருவார்.

''மிஸ்டர் மார்லோ! உங்களைத் தேடுகிற கூட்டம் வருவதற்குள் நீங்கள் தப்ப வேண்டும். ஓடிவிடுங்கள்.''

அவர்கள் ஓடினார்கள். சர்வாதிகாரத்தின் பிடியிலிருந்து தப்பவும் மற்றவர்களைத் தப்புவிக்கவும் அவர்கள் ஓடினர்கள்.

ரொஸாரியோ நின்றுன். வானத்தைப் பார்த்தான். செத்துக் கிடந்த நண்பன் ஆண்டர்ஸனை நோக்கினன். பணத்துக்கு ஆசைப்பட்டு என்ன காரியம் செய்துவிட்டான் அவன்? பக்கத்துத் தேசத்துக்குப் பறந்து கொண்டிருந்த மார்லோவை அவருடைய தேசத்தின் எல்லைப்புறத்துக்குள்ளேயே இறக்கி அவருடைய விரோதிகளான ராணுவ ஆட்சியாளரிடம் பிடித்துக்கொடுக்க முயன்று... அவன் முயற்சி பலிதமாகக் கூடாது.... மார்லோ பிடிபடக் கூடாது...

அருகே மலைச் சரிவை யொட்டிய பாதையில் இராணுவ வண்டிகள் விரைந்து வந்தன.

ஜெனரலின் ஆட்கள் வந்து விடுவார்கள்.

''யெஸ்! நான்தான் காப்டன் ரொஸாரியோ. ஒரு சின்னச் சண்டை நடந்தது. தப்பிவிட்டார்கள்'' என்று சொல்ல வேண்டிய பதிலை ஒரு முறை வகைப்படுத்தினன்.

அந்தப் பதிலில் ஏமாற்றமடைந்து கோபத்துடன் அவர்கள் அழுத்தப் போகிற துப்பாக்கி விசையின் ஒலியை நினைத்துப் பார்த்தான். உடல் நடுங்கியது. சர்வாதிகாரிகளை வெல்ல இது போல் எத்தனையோ உயிர்த் தியாகங்கள்....

எலிஸா அவனுடைய நினைவில் நிழலாடினள். தூரத்தே எங்கோ ஜீப்பின் உறுமல் எதிரொலித்தது. ஜனதிபதி மார்லோ எப்படியும் தப்பவேண்டும் என்று பிரார்த்தனை செய்தான் ரொஸாரியோ.

துப்பாக்கியின் இயக்கம் அருகில், அவனுக்கு வெகு அருகில் கேட்டது....





# போய்விடுமா போலியோ?

இளம்பிள்ளை வாதநோய் அண்மையில் சென்னையில் மட்டும் 51 குழந்தைகளைப் பலி வாங்கியுள்ளது. இந்த நோயைப் பற்றியும், அது பரவாதிருக்கத் தமிழக அரசு என்னென்ன நடவடிக்கைகள் எடுத்துள்ளது என்பதைப் பற்றியும் உரையாடுபவர்கள்: தியாகராயநகர் தொகுதி எம். எம். ஏ. டாக்டர் சௌரிராஜன் - மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர் டாக்டர் எச். வி. ஹண்டே.

**சௌரிராஜன்:** சென்னையில் இளம்பிள்ளை வாத நோய் திடீரென்று பரவி மக்களைப் பீதிக்குள்ளாகி யிருக்கிறது. 51 குழந்தைகள் இறந்திருக்கின்றனர். நல்வாழ்வுத் துறை அமைச்சர் என்ற முறையில் மக்களுக்கு இந்த நோயின் தன்மைகளைப் பற்றியும், தடுப்பு முறைகளைப் பற்றியும் அறிக்கை விடுவீர்கள் என்று எதிர் பார்த்தேன். ஏமாற்றம்தான் ஏற்பட்டது.

**ஹண்டே:** சட்டசபை நடந்து கொண்டிருக்கும்போது வெளியே எதுவும் சொல்லக் கூடாது என்பது உங்களுக்கே தெரியும். பிரச்னை எழுப்பப்பட்ட நேரத்தில் சட்டசபை நடந்து கொண்டிருந்தது. இதைப் பற்றி சட்டசபையில் ஒரு ஒத்திவைப்புத் தீர்மானம் கொண்டு வந்து பதில் சொல்லி விட்டோம். மேல் சபையிலும் சொன்னேன். 'தைரியமாக இருங்கள். எந்தவித கவலையும் வேண்டாம்' என்று. இதற்கு மேலும் ஓர் அறிக்கையும் விளம்பரமும் தேவை என்று தோன்றினால் செய்யலாம். ஆனால் சட்ட சபையிலேயே கூறிவிட்டதால் அதற்கு ஒரு முக்கியத்துவம் ஏற்பட்டு விட்டது. உண்மையாகவே பீதி ஏற்பட்டுள்ளதா என்பது அடுத்த கேள்வி. சாதாரணமாக பிப்ரவரி, மார்ச் மாதங்களில் போலியோ தாக்குதல் சற்று அதிகமாக இருப்பது இயற்கை. இளம்பிள்ளை வாதமானாலும் சரி, வாந்தி பேதியானாலும் சரி, அநேகமாக எல்லாக் குழந்தைகளுமே அரசினர் குழந்தைகள் நல மருத்துவ மனையில்தான் சேர்க்கப்படுகிறார்கள். எல்லோருமே அங்கே போவதால் அந்த மருத்துவ மனையின் பொறுப்பு அதிகமாகிறது. ஒரு நாளைக்கு அங்கு 80 குழந்தைகள் சேர்த்துக் கொள்ளப்படுகின்றனர். அதில் 20 குழந்தைகளுக்கு வாந்தி பேதி. ஆனால் இந்த வியாதிக்கு ஏனோ அவ்வளவாக விளம்பரம் இல்லை. ஒரு பத்திரிகையில் போலியோ வியாதியைப் பற்றி விவரம் வந்து விட்டது என்பதற்காக மக்களிடையே பீதி ஏற்படத் தேவையில்லை. நாங்கள் உரிய நடவடிக்கைகள் எடுத்து வருகிறோம்.

**சௌரிராஜன்:** சென்ற வருடத்தை விட இந்த வருடம் இளம்பிள்ளை வாதம் அதிகமாக இருக்கிறதல்லவா?

**ஹண்டே:** கொஞ்சம் அதிகமாயிருக்கிறது.

**சௌரிராஜன்:** சென்னையைப் பொறுத்த வரை இளம்பிள்ளை வாத நோய் உயிரைக் கொள்ளை கொண்டு போகும் நோயாக ஆனதே யில்லை, ஆனால் இந்த ஆண்டு தீவிர தொற்றுநோயாகப் பரவி வருவதாகத் தெரிகிறதே!

**ஹண்டே:** இதை நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். குறிப்பிட்ட இந்த வியாதி வழக்கத்தை விட அதிகமாக இருப்பதால் பயங்கரமாகப் பரவி வருகிறது என்று கூற இயலாது. தமிழ் நாட்டின் நாங்கள் பல்வேறு ஊர்களுடன் தொலை பேசி மூலம் தொடர்பு கொண்டு செய்திகளை விசாரித்துக் கேட்டறிந்தோம். சமீபத்தில் நான் தஞ்சாவூர் சென்றிருந்தேன். நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். அங்குள்ள குழந்தைகள் மருத்துவ மனையில் இளம்பிள்ளை வாத நோய் சிகிச்சைக்காக அனுமதிக்கப்பட்டுள்ள குழந்தைகள் எண்ணிக்கை சென்ற வருடத்தை விட இந்த வருடம் 20 சதவிகிதம் குறைந்துள்ளது. ஆனால்

ஒன்று, நாங்கள் அலட்சியம் பண்ணவில்லை. நோயை முறியடிக்க வேண்டிய எல்லா நடவடிக்கைகளையும் எடுத்திருக்கிறோம். போலியோ மட்டுமல்ல, மற்ற பல தொற்று நோய்த் தடுப்பு முறைகளையும் நாங்கள் மேற்கொள்ளுகிறோம். அரசிலும் நகராட்சியிலும் உள்ள பல்வேறு சுகாதார, மருத்துவக் கல்வி அதிகாரிகள் ஒருங்கிணைந்து ஒத்துழைக்கிறார்கள்.

**சௌரிராஜன்:** சாதாரணமாக இளம்பிள்ளை வாத நோய் கண்ட நூறு குழந்தைகளில் நான்குதான் மரணமடையும். மேலும் மூன்று முதல் ஐந்து சதவிகிதம் குழந்தைகளுக்குக் கால் கை விளங்காமல் போகும். மீதமுள்ள 90 சதவிகிதக் குழந்தைகள் உடலின் உள்ளேயே இருக்கும் எதிர்ப்புச் சக்தி வேலை செய்வதன் காரணமாய் ஊனமின்றித் தப்பிவிடும். 50 குழந்தைகள் சென்னையில் இறந்துவிட்டன என்றால் அதிலிருந்து இந்த நோய் எவ்வளவு குழந்தைகளைத் தாக்கியிருக்கும் என்று அனுமானிக்கலாம் அல்லவா?

**ஹண்டே:** தமிழ் நாட்டில் அதிகமாகக் குழந்தைகள் மரிப்பது வாந்தி பேதியால் தான். ஆனால் இதைப் பற்றி ஏனோ யாரும் அவ்வளவாகப் பேசுவதில்லை. இளம்பிள்ளை வாத நோய் வருடா வருடம் எவ்வளவு வருகிறதோ அந்த அளவு இந்த வருடமும் இருக்கத்தான் செய்கிறது. ஆனால் குறிப்பிட்ட ஒரு மருத்துவ மனைக்கு மட்டுமே எல்லாக் குழந்தைகளும் செல்வதால் நிலைமை மிகைப்பட்டுத் தோற்றமளிக்கிறது. யாரும் பயப்படத் தேவையில்லை.

இளம்பிள்ளை வாதத்துக்கான தடுப்பு வாக்சினை மிகவும் குளுமையான இடத்தில் வைத்திருக்க வேண்டும். நான்கு டிகிரி குளிர் பதனப் பெட்டியில் அது இருக்க வேண்டும். ஆனால் இப்பொழுது பல மருந்துக் கடைகளிலும் சரி, தனியார் மருத்துவ மனைகளிலும் சரி, டாக்டர்களிடமும் சரி, அது சரியாக இந்த நிலையில் பராமரிக்கப் படாததால் தடுப்பு மருந்தின் சக்தி படிப் படியாகக் குறைய ஆரம்பிக்கிறது. டிரக் இன்ஸ்பெக்டர்களை அனுப்பிச் சோதனை செய்கிறோம். மருந்தின் வீரியம் என்ன என்பதைத் தெரிந்து கொண்டு அதை உபயோகிக்கலாமா வேண்டாமா என்பதை முடிவு செய்கிறோம்.

**சௌரிராஜன்:** இறந்த 51 குழந்தைகளும் இளம்பிள்ளை வாதத்தால்தான் இறந்துவிட்டன என்பதை நீங்கள் உறுதி செய்துகொண்டு விட்டீர்களா?

**ஹண்டே:** நீங்கள் இந்தக் கேள்வியைக் கேட்டதற்காக உங்களுக்கு மிகவும் நன்றி. நீங்கள் எழுப்பிய இந்தச் சந்தேகம்தான் என் ஐயமும். சில சமயம் மருத்துவர்கள் இளம்பிள்ளை வாதத்தால்தான் குழந்தைகள் இறந்துவிட்டன என மேம்போக்காக முடிவு செய்கிறார்கள். ஆனால் தீவிரப் பரிசோதனைகளுக்குப் பின்பே முடிவு செய்யப்பட வேண்டிய விஷயம் இது. இளம்பிள்ளைவாதமாக இருக்கலாம் எனச் சந்தேகித்து வைத்தியம் செய்ய ஆரம்பித்திருக்கலாம். ஆனால் அது இல்லாமல் இருந்திருக்கலாம். இதனாலும் எண்ணிக்கை 51 வரை உயர்ந்திருக்கலாம். உங்களைப் போன்ற அனுபவமுள்ள டாக்டர்களால்தான் இந்த விஷயத்தைப் புரிந்து கொள்ள முடியும். பலருக்குத் தெரியாது.

**சௌரிராஜன்:** ஒரு கேஸையாவது நீங்கள் போஸ்ட்மார்ட்டம் செய்து அது இளம்பிள்ளை வாதம்தான் என முடிவு செய்துவிட்டீர்களா?

**ஹண்டே:** நீங்கள் சட்ட சபையில் கூறிய இந்தக் கருத்தின் அடிப்படையில் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. வேலூர் மருத்துவ மனையில் ஆராய்ச்சி நடக்கிறது.

**சௌரிராஜன்:** சீதோஷ்ண நிலை மாற்றங்களினால் வாக்சின் சக்தி அதிகரித்துவிடுமென்றும், அப்படி அதிகரிப்பதால் அதுவே ஆபத்து என்றும் அதனாலேயே போலியோ வந்துவிடுமென்றும் மக்களிடம் பரவலான ஒரு **தப்பபிப்பிராயம்** நிலவுகிறது...

**ஹண்டே:** வாக்சின் சரியாகப் பாதுகாக்கப்படாமல் இருந்தால் சக்தியற்றுப் போகிறதே ஒழிய அதிகரிப்பதாக எண்ண இடமில்லை. ஆனால் சக்தியற்றுப் போவதில் கூட வேறு ஒருவித ஆபத்து உண்டு. எப்படி என்றால் இளம்பிள்ளை வாத நோய்க்குத் தடுப்பு மருந்து போடுகிறோம் என நினைத்துக்கொண்டு சக்தியற்ற இந்த மருந்தைப் போட்டு இனி இளம்பிள்ளை வாதம் வராதுஎன்று உறுதியாக நினைத்துக்கொண்டிருப்பார்கள். அந்தக் குழந்தைகளுக்கு இந்த நோய் வரும்போது அலட்சியமாக இருந்து ஏமாற வாய்ப்புண்டு. எனவே எல்லா வாக்சினையும் பரிசோதிக்கச் சொல்லியிருக்கிறோம். பலர் இந்தத் தடுப்பு மருந்தை முழுமையாகக் கொடுப்பதுமில்லை. பாதியிலேயே நிறுத்திவிடுகிறார்கள். பயனில்லாமல் போகிறது. டாக்டர் கூறுவதைக் கேட்டு முழுமையாக மருந்தைக் கொடுக்க வேண்டும் என்ற உணர்வை நம் மக்களுக்கு நாம் ஏற்படுத்த வேண்டும்.

உரையாடல் தொகுப்பு: "சலன்"
படம்: ஏ. வி. பாஸ்கர்



"ஒரு பத்திரிகை ஆசிரியருக்கு வருத்தம் உண்டு பண்ணிட்டேன்."

"எப்படி?"

"துணுக்கு ஒன்று அனுப்பினேன். பிரசுரிக்க இயலாமைக்கு வருந்துகிறோம்னு எழுதியிருக்கார்!"

- பிரியா பானு

# சேவையில் சிங்கங்கள்!

சிங்கத்தின் பிடறியைப் பிடித்து உலுக்க வேண்டும் என்று எனக்கு வெகுநாளாக ஆசை. அது முடியாததால் அரிமா சங்கம் 324-A டிஸ்ட்ரிக்ட் கவர்னர் டாக்டர் பு. வாசுதேவ ராவ் அவர்களைப் பேட்டி கண்டேன்; சில காரமான கேள்விகளுடன். நிர்வாகக் குழுவில் சில முக்கியமானவர்கள் அவருடன் இருந்தனர்.

டாக்டர் வாசுதேவ ராவ் கவர்னராக இருக்கும் 324-A டிஸ்ட்ரிக்ட், இந்தியாவில் இருக்கும் 23 டிஸ்ட்ரிக்ட்களில் ஒன்று. 324-Aயின் கீழ் 106 கிளப்கள் இயங்குகின்றன! சென்னை நகரில் மட்டும் 57 கிளப்புகள்! டாக்டர் வாசுதேவ ராவ் அதிக உயரமில்லை. டாக்டராகவும், லயன்ஸ் டிஸ்ட்ரிக்ட் கவர்னராகவும் பிஸியாக இருந்தும் ஒரு பெரிய மனிதத்தோரணை இல்லை. பார்த்தவுடனேயே வசப்படுத்திவிடும் சிநேகமான சிங்கம்.

டாக்டர், பொது மக்களைப் பொறுத்த வரை லயன்ஸ் கிளப் போன்ற அமைப்புக்கள் அதன் அங்கத்தினர்களின் சந்தோஷத்துக்கும் கேளிக்கைகளுக்கும் மட்டுமே நட்சத்திர ஹோட்டல்களில் கூடுகின்றன என்றும், அதன் அங்கத்தினர்கள் ஒரு சமூக அந்தஸ்தைப் பிறருக்குக் காண்பித்துக் கொள்வதற்காகவே சங்கத்தில் சேர்கின்றனர் என்றும் சில அபிப்பிராயங்கள் நிலவுகின்றனவே — இதற்கு உங்கள் பதில் என்ன?



டாக்டர் பு. வாசுதேவராவ்

டாக்டர் மெல்லச் சிரித்தபடி தம் சகாக்களைப் பார்த்துவிட்டுப் பதில் சொல்கிறார்:

"பலருக்கும் இந்த எண்ணம் இருப்பது உண்மை. ஏன், நாங்கள் சமீபத்தில் பம்பாயில் கூடியபோது ஒரு மிகப் பெரிய மல்டி நேஷனல் ஸ்தாபனத்தின் தலைவரே கேட்டார், 'உங்கள் கூட்டங்களை இப்படி ஐந்து நட்சத்திர ஹோட்டல்களில்தான் வைத்துக் கொள்ள வேண்டுமா?' என்று. ஒன்றை முதலிலேயே சொல்லி விடுகிறேன்: லயன்ஸ் கிளப் முழுக்க முழுக்க ஒரு சேவை ஸ்தாபனம் அல்ல. பொதுமக்கள் சேவை எங்கள் நடவடிக்கைகளின் ஒரு பகுதி.

லயன்ஸில் நாங்கள் வெகுவாக எதிர்பார்ப்பது அங்கத்தினர்களுக்குள் அந்நியோன்யம். நான் முழுதும் ஏற்கும் பெரும் பொறுப்புகளிலும் சுமைகளிலும் நாங்கள் அழுந்திப் போய் விடாமல், விச்ராந்தியாகச் சற்று நேரம் இருக்க நாங்கள் இதை ஒரு வடிகாலாக வைத்துக் கொண்டிருக்கிறோம். எக்ஸிக்யூட்டிவ்கள், டாக்டர்கள் என்று ஒரேயடியாக மேல் மட்ட நபர்களே அங்கத்தினர்களாக இருந்து வந்த லயன்ஸ் கிளப்களில், இன்று எத்தனையோ மத்தியதர, உயர் மத்தியதர மக்களும் உறுப்பினர்களாகி உற்சாகத்துடன் பங்கெடுத்துக் கொள்கிறார்கள். பலதரப்பட்ட பணிகளிலும் துறைகளிலும் ஈடுபடும் பலர் ஒருங்கே கூடுவதில் வித்தியாசங்கள் மறைந்து விடுகின்றன. நட்பும் அன்னியோன்யமும் உயர்ந்து நிற்கின்றன.

இரண்டாவதாக நாங்கள் ஒரு நல்ல இடத்தில் கூடுவது பெரிய நகரங்களில் மட்டும்தான். ஓட்டல்கள் வசதியாக இருப்பதை நாங்கள் பயன்படுத்திக் கொள்கிறோம். சிற்றூர்களில் ஒரு கப் டீயோ காப்பியோ வரவழைத்துக் கூட்டத்தை நடத்தி விடுவது பலருக்குத் தெரிந்திருக்காது.

மூன்றாவதாக அங்கத்தினர்கள் அவர்களாகக் கொடுக்கும் சந்தாத் தொகையிலிருந்துதான் இந்த ஓட்டல் செலவுகளை ஏற்கிறோம். நடவடிக்கைகளுக்கான கணக்கும், எங்கள் நிர்வாகத்துக்கான கணக்கும் வெவ்வேறானவை.

நீங்கள் வசூலிக்கும் நன்கொடைகள் அல்லது உங்கள் ஆண்டு மலர்களில் விளம்பரம் வெளியிட்டு வசூலிக்கும் தொகைகள் — இவை சரியாகத்தான் செலவு செய்யப்படுகின்றன என்று கண்காணிப்பதற்கு ஏதும் வகை வசதி இருக்கிறதா? ஏனென்றால் அவையும் பார்க்கப் போனால் பல கம்பெனிகள், ஸ்தாபனங்கள் மூலமாக வரும் பொது மக்கள் பணம்தானே?

ஒவ்வொரு லயன்ஸ் கிளப்புக்கும் ஒரு இயக்குனர் குழு இருக்கிறது. மாதம் ஒரு முறை இவர்கள் சந்திக்கிறார்கள். வரவு-செலவுக் கணக்குகளை விசாரித்தறிகிறார்கள். இதன் கீழ் ஒரு நிதிக் குழு செயல்படுகிறது. ஒவ்வொரு மாதமும் இந்தக் குழு நிதி நிர்வாகத்தைப் பரிசீலிக்கிறது.

டிஸ்ட்ரிக்ட் அளவில் பல்வேறு கிளப்களிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்ட 78 மெம்பர்கள் கொண்ட காபினெட் செயல்படுகிறது. ஒவ்வொரு கிளப்பும் மூன்று மாதத்துக்கு ஒரு முறை இந்தக் காபினெட்டுக்குக் கணக்குகளைக் கட்டாயம் சமர்ப்பிக்க வேண்டும். ஆறு மாதத்துக்கு ஒரு முறை எல்லா அங்கத்தினர்களும் கூடும் பொதுக் குழுவில் இந்த வரவு செலவுக் கணக்குகள் பார்வையிடப்பட்டு அங்கீகரிக்கப்படுகின்றன. சார்ட்டட் அக்கவுண்டன்ஸி தேறிய கிளப்பின் நிதி ஆலோசகர் ஒருவர் பட்ஜெட் தயாரிக்க உதவுகிறார். ஒவ்வொரு வருடத்து வரவு செலவுக் கணக்கும் ஓர் ஆடிட்டரால் பரிசீலிக்கப்பட்டு டிஸ்ட்ரிக்ட் அளவிலும் சர்வதேச அளவிலும் சமர்ப்பிக்கப்படுகிறது.

இது உடல் ஊனமுற்றோர் ஆண்டு ஆயிற்றே, குறிப்பாக ஏதும் திட்டங்கள் வைத்திருக்கிறீர்களா?

முப்பதுக்கும் மேற்பட்ட உடல் ஊனமுற்றோர் பராமரிப்பு ஸ்தாபனங்களுக்கு ஏற்கனவே நாங்கள் உதவி வருகிறோம். நீங்கள் எடுத்துச் சொன்ன காரணத்தால், எல்லா

உடல் ஊனமுற்றோர் பராமரிப்பு ஸ்தாபனங்களையும் ஒன்று திரட்டி ஒரு சிறப்பு நிகழ்ச்சி நடத்தலாம் என்று தோன்றுகிறது. இந்தச் சமயத்தில் எங்கள் சேவை சம்பந்தப்பட்ட தகவல்களையும் சொல்லி விடுகிறேன்:

லயன்ஸ் கிளப்கள் வருடத்தில் 20 முதல் 25 லட்சம் ரூபாய் வரை பல வகைப்பட்ட உதவிகளுக்காகச் செலவிடுகின்றன. ஆஸ்பத்திரி நடத்துகிறோம். – குறிப்பாக தியாகராய நகர் கண் ஆஸ்பத்திரி. கிண்டி தொழிற் பேட்டையில் 800 மாணவர்கள் பயிலும் பள்ளி அமைத்திருக்கிறோம். நாங்கள் நடத்தும் மெடிகல் சென்டர்களில் புகழ் வாய்ந்த நிபுணர்கள் 2 அல்லது 3 மணி நேரம் வந்து நோயாளிகளைக் கவனிக்கிறார்கள். சில வெளியூர்களில் கிளப் அங்கத்தினர்களே தம் சொந்தப் பணத்தை நன்கொடையாக அளித்து இதுபோன்ற உதவிகளைச் செய்து வருகிறார்கள். ஜூலை 1980 முதல் 65 மருத்துவ முகாம்கள் நடத்தி, முழுச் சுகாதாரப் பரிசோதனைகள் நடத்தியிருக்கிறோம். பள்ளிகளில் தொழுநோய் கண்டுபிடிப்பு முகாம் நடத்தி, அங்குள்ள ஆசிரியர்களே மேற்கொண்டு தொடர்ந்து வைத்திய வசதியளிக்க உதவினோம். ஜெர்மன் தொழுநோய் மிஷனுடன் சேர்ந்து 'எ ஸ்டிச் இன் டைம்' என்ற கலர் செய்திப் படம் தயாரித்து முக்கியமான தமிழ் நாட்டுத் தியேட்டர்களில் வெளியிட்டிருக்கிறோம். இது எத்தனை பேருக்கு உதவியிருக்கிறது என்று எங்களுக்கு வரும் ஏராளமான கடிதங்கள் சொல்லுகின்றன.

லால்குடி ஸ்டேஷனில் மெயில் வண்டி ஒன்று நிற்பதில்லை என்று பொதுமக்கள் முறையிட்டபோது, லயன்ஸ் கிளப் முன்வந்து, அந்த ரயில் அங்கே நிற்க உதவியது. போக்குவரத்துச் சந்திப்புகளில் போலீசுக்குப் பாதுகாப்புக் குடையும், பொதுமக்களுக்குச் சாலை பாதுகாப்பு பற்றிய அறிவிப்புப் பலகைகளும் அளித்திருக்கிறது.

வில்லிவாக்கம் லயன்ஸ் கிளப் அங்கேயுள்ள பொதுமக்களின் சுகாதார தேவைகள் விஷயத்தில் முழுக்க முழுக்க உதவுகிறது. மெரினா கடற் கரையில் ஐம்பதாயிரம் ரூபாய் செலவில் குடிதண்ணீர் வசதிக்கான அடிக்கல் நாட்டப்பட்டிருக்கிறது. சில லயன்ஸ் கிளப்களில் அங்கத்தினர்களின் ரத்த குரூப் ரிஜிஸ்தரில் குறித்து வைக்கப் பட்டிருக்கிறது. அவசரத் தேவையின்போது ஒரு போன் கால் செய்தால் போதும். அந்த க்ரூப் மெம்பரிடமிருந்து உடனடியாக ரத்தம் வழங்க ஏற்பாடு செய்யப்படுகிறது.

மத்திய சென்னை லயன்ஸ் கிளப், ரயில்வே ஹாஸ்பிடலுக்கு நிறைய ரத்த தானம் செய்திருக்கிறது. வேலூர் லயன்ஸ் கிளப் உறுப்பினர்கள் கிறிஸ்துவ மருத்துவ மனைக்கு நிரந்தரமாக ரத்த தானம் செய்கிறார்கள்.

இவை தவிர இயற்கையின் விளைவால் வரும் வெள்ளப் பெருக்கம், புயலின்போதும், கான்ஸர் ஆராய்ச்சிக்கும் கூட லயன்ஸ் கிளப் உதவுகிறது.

டாக்டர் வாசுதேவ ராவைச் சந்தித்து விட்டு வெளியே வரும்போது, இருளைக் கிழித்துக்கொண்டு நிலவு பளிரிடுகிறது. *சாருகேசி

---

## அந்த நாள் ஞாபகம்

1968. இடம்: பழனியாண்டவர் கலைக் கல்லூரி., பழனி. நேரம்: பிற்பகல். முதல் வகுப்பு.

ஆங்கிலப் பேராசிரியர் திரு. இராமமூர்த்தி அவர்கள் 'மேக்பெத்' நடத்திக் கொண்டிருந்தார். லேடி மேக்பெத் மனக் குழப்பத்தினால் தூக்கத்தில் நடந்தவாறே புலம்பும் காட்சி. (Sleep walking scene) வகுப்பு ஒரே அமைதியாகப் பாடத்தைக் கேட்டுக் கொண்டிருந்தது.

எனக்கு அடுத்ததாய் உட்கார்ந்திருந்த மாணவர் கன்னத்தில் கையை ஊன்றியபடி தூங்கி விட்டார். இவரை அடுத்து உட்கார்ந்திருந்த மாணவர் கொஞ்சம் குறும்புக்காரர். இவரை மெதுவாய்த் தட்டி எழுப்பி, பேராசிரியர் பக்கத்தில் வரச் சொல்லிக் கோபத்துடன் கூப்பிடுவதாய் இவரைக் கிளப்பி விட்டார்.



நல்ல தூக்கத்தில் திடீரென்று எழுப்பப் பட்டதும், அந்த மாணவர் பதறிப்போய்க் கடா புடா என்ற ஓசையுடன் எழுந்து பேராசிரியரின் முன்னால் போய் பயந்து நின்றார். பேராசிரியருக்கோ, மற்ற மாணவர்களுக்கோ ஒன்றும் புரியவில்லை. பேராசிரியர் அந்த மாணவரிடம் ''என்ன?'' என்று கேட்டார். அந்த மாணவர் மன்னிப்புக் கேட்கும் பாவனையில் தலையைக் கீழே போட்டுக் கொண்டார். ''ஏன் இங்கே வந்தாய்?'' என்று பேராசிரியர் அதட்டுவது போல் கேட்டார். ''நீங்கள்தானே கூப்பிட்டீர்கள்?'' என்று அந்த மாணவர் சொல்ல ''நான் எப்போது உன்னைக் கூப்பிட்டேன்?'' என்று பேராசிரியர் திரும்பக் கேட்டார். அந்த மாணவர் குழப்பத்துடன் சுற்று முற்றும் பார்த்துவிட்டு, ''சாரி சார்'' என்று பேராசிரியரிடம் சொல்லிவிட்டுத் தன் இருக்கைக்குத் திரும்பி வந்தார். வரும் வழியிலேயே மனம் குறுகுறுத்துப் போய், மறுபடியும் பேராசிரியரின் முன்னால் போய் நின்றார். பேராசிரியர் தூக்கக் கலக்கத்தில் இருந்த அந்த மாணவரைப் பார்த்து ஒன்றும் கூறாமல் புன்னகை செய்தார். மாணவர் ஒரு வழியாக இருக்கைக்குத் திரும்பினார். பேராசிரியர் சிரிப்பை அடக்கிக் கொண்டு புத்தகத்தை விரித்தபடி What we are seeing now is.. the sleep walking scene!" என்று பாடத்தைத் தொடர்ந்ததும் வகுப்பில் எழுந்த வெடிச் சிரிப்பில் அந்த மாணவருக்குத் தூக்கம் சுத்தமாய்த் தெளிந்து விட்டது!

-முத்து. தங்க. ஐயப்பன்



# உலாப்பாடிய சேரமான்

திருமுருக கிருபானந்தவாரியார்

மலை நாட்டிலே மகோதை யென்னும் பெயரையுடைய கொடுங்கோளூரில் சேரர் குடியிலே பெருமாக் கோதையார் என்னும் சத்புத்திரர் ஒருவர் தோன்றினர். அவர் இளமையிலேயே வைராக்கியமுற்று சிவபக்தி மிகுந்து இராஜ கருமத்தை வெறுத்து, திருவஞ்சைக் களத்திலே திருவாலயத் தொண்டினை அன்புடன் செய்வாராயினர்.

அக்காலத்தில் செங்கோற் பொறையன் என்னும் சேர மகாராஜன் துறவறத்தை மேற்கொண்டு தவவனம் அடைந்தான். மந்திரிமார்கள் திருவஞ்சைக்களம் போந்து, பெருமாக் கோதையாரை வணங்கி அரசராகும்படி வேண்ட, அவர் சிவாக்ஞை மேற்கொண்டு உயிர்கள் கழறினவற்றை அறியும் அறிவையும் அழிவில்லாத ஆற்றலையும் பெருங் கொடையையும், பற்பல படைகளையும் பக்தி நெறி வழுவாமல் அரசியற்றும் ஆண்மையையும் சிவபெருமான்பால் பெற்று வணங்கி, விடை பெற்று, நல்ல சுபதினத்திலே முடிசூடி, சிவாலயத்தை வணங்கி யானை மீதூர்ந்து வெண் கொற்றக் குடை நிழற்ற, வெண் சாமரமிட சகல விருதுகளுடனும் பவனி வரும்போது, ஒரு சலவைத் தொழிலாளி உவர் மண்ணைச் சுமந்து வர, மழையினாலே கரைந்த உவர் மண் அந்தச் சலவைத் தொழிலாளி உடம்பிலே விபூதி போல் தோன்ற, அதுகண்ட பெருமாக் கோதையார் என்னும் சேரமான் பெருமாணாயனார், உடனே யானையினின்றுமிறங்கி விரைந்துபோய் வணங்கினார். அதுகண்ட சலவைத் தொழிலாளி நடு நடுங்கி அவரை அடிவணங்கி, ''அண்ணலே அடியேன் வண்ணான்'' என்று சொல்ல சேரமான் பெருமாணாயனாரும் 'தேவரீர் திருநீற்று வடிவத்தை நினைப்பித்தீர் அடியேன் அடிச்சேரன் வருந்தாதீர் போம்'' என்று சொல்லி அருளினார். அவருடைய அடியார் பக்தியைக் கண்ட மந்திரிமார்கள் முதலியோர், மிகவும் இரும்பூதுற்று இறைஞ்சினார்கள். சேரமான் பெருமாள் நாயனார் நாள்தோறும் செய்யும் பூசை முடிவிலே நடராஜப் பெருமானுடைய சிலம்பொலி கேட்கும். அடியார்க்கும் மிடியார்க்கும் பொன் மாரி பொழிந்து வருவார். சிவபெருமான் கொடுத்து அனுப்பிய திருமுகப் பாசுரத்தைச் சென்னியில் மேற்கொண்டு வணங்கி அத்திருமுகம் கொண்டு வந்த பாண பத்திரருக்கு அளப்பில்லாத கரதானங்களை நல்கி உபசரித்தார்.

ஒரு நாள் பூஜாந்தரத்திலே ''சபாநாதருடைய சிலம்பொலி கேளாதொழிய சேரமான் பெருமாள் நாயனார் மனமயங்கி, ''அடியேன் யாது பிழை செய்தேனோ? இனி இந்த உடம்பை ஒழிப்பேன்'' என்று வாள் கொண்டு உயிர் விடத் துணிந்தனர். உடனே சபாநாயகர் சிலம்பொலி கேட்கச் செய்து, ''அன்பனே! சுந்தரமூர்த்தியின் பாடலைக் கேட்டு வரத் தாழ்ந்தோம்'' என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய பெருமையை வெளிப்படுத்தினார். சேரமான் பெருமாள் நாயனார் சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய பெருமையையும், அவர் அருட் பாடலின் அருமையையும் கனகசபாபதி அடியார்க்கருளும் கருணையின் திறத்தையும் நினைந்து நினைந்து நெஞ்சம் நெகிழ்ந்து சுந்தரமூர்த்தி சுவாமிகளைத் தரிசிக்கும் ஆவல் கொண்டு, திருவாரூர் போந்து, வன்றொண்டரை வணங்கி, வன்மீக நாதர் மீது மும்மணிக் கோவையையும், சபாநாதர் மீது பொன்வண்ணத்தந்தாதியையும், வேதாரண்யர் மீது திருவந்தாதியையும் பாடி வழிபட்டார்.

பல நாட்களுக்குப் பின் சுந்தரமூர்த்தி சுவாமிகளைத் தம்முடைய கொடுங்கோளூருக்கு அழைத்துச் சென்று மிகவும் உபசரித்து அவருடன் மிக்கதோர் நட்புக் கொண்டு தமது பண்டாரத்திருந்த செல்வம் முழுவதையும் கொடுத்து ஆரூருக்கு அனுப்பினார். அவரை மறவாது அரசு செய்து வந்தார். பின்பு ஒரு சமயம் அந்திவண்ணனைத் தூது கொண்ட சுந்தரமூர்த்தி நாயனார் கொடுங்கோளூருக்கு வந்து சேரமான் பெருமாள் நாயனாருடன் எழுந்தருளி யிருந்தார். பல நாளாயின பின் சுந்தரமூர்த்தி நாயனார் திருவஞ்சைக் களஞ் சென்று சுவாமி தரிசனம் செய்துகொண்டு இருந்தபோது திருக்கைலாயத்தினின்றும் சிவபெருமானால் அனுப்பப்பட்ட வெள்ளை யானையின் மேல் ஏறி, இந்திரன், மால், பிரமன் எழிலார் மிகு தேவர் எல்லாரும் வந்து எதிர்கொள்ளச் செல்லும் போது தமது அருமைத் தோழராகிய சேரமான் பெருமாள் நாயனாரை நினைத்தார்.

நீராடிக் கொண்டிருந்த சேரமான் பெருமாள் நாயனார், தம்பிரான் தோழருடைய நினைவை உணர்ந்து உடனே அருகிலே நின்ற குதிரை மீது ஏறி திருவஞ்சைக் களஞ் சென்று, இராவணமூர்ந்து, ஆகாயத்திற் செல்லும் ஆரூரடிகளைக் கண்டு தாம் ஏறிய குதிரையின் செவியிலே ஐந்தெழுத்தை ஓதியருளினார். உடனே அக்குதிரை ஆகாயத்தில் பாய்ந்து நம்பியாரூரருடைய வெள்ளை

யானையை அடைந்து அதனை வலஞ்செய்து முன்னால் சென்றது. சேரமான் பெருமாள் நாயனாருடைய படை வீரர்கள், குதிரை மேற் செல்லும் அந்நாயனாரைத் தங்கள் கண்ணுக்குப் புலப்படும் எல்லை வரைக்கும் ஆகாயத்திலே கண்டு, பின் காணாமையால் மிகுந்த திடபக்தியால் உடைவாள்கொண்டு தங்கள் உடம்பை வீழ்த்தி வீர யாக்கையைப் பெற்றுப் போய், சேரமான் நாயனாருக்கு முற்பட்டு அவரை வணங்கிக்கொண்டு சென்றார்கள். சேரமான் பெருமாள் நாயனாரும், சுந்தரமூர்த்தி நாயனாரும், உள்ளுவார் வினையகற்றும் வெள்ளியம் பொருப்பை நண்ணியவுடனே, குதிரையினின்றும், யானையினின்றும் இறங்கி, பல வாயில்களையும் கடந்து, திருவணுக்கன் திருவாயிலை அடைந்தார்கள். அங்கே சேரமான் பெருமாள் நாயனார் தடைப்பட்டு நிற்க,' சுந்தரமூர்த்தி நாயனார் உள்ளே போய், சிவசந்நிதியில், நிலத்தில் விழுந்து வணங்கி, எழுந்து துதித்து நின்று, ''எந்தையே! தேவரீருடைய திருவடிகளை அடையும் பொருட்டுச் சேரர் கோன் திருவணுக்கன் திருவாயில் அடைந்து நிற்கின்றார்'' என்று விண்ணப்பம் செய்தார். புரிசடைக் கடவுள் புன்முறுவல் செய்து சேரமான் பெருமானை அழைப்பிக்க அவர் ஆராத அன்புடன் விரைந்து சென்று பன்முறை விழுந்து வணங்கித் துதித்து நின்றார். செம்மேனிப் பொம்மல் திருமுறுவல் கொண்டு, ''இங்கே நாம் உன்னை அழையாதிருக்க, நீ வந்தது என்ன?'' என்று அருளிச் செய்ய, சேரமான் பெருமான் நாயனார், கைகூப்பி, ''பண்ணவர் போற்றும் கண்ணுதற் கடவுளே! சுந்தரமூர்த்தி நாயனாருடைய திருவடிகளைத் துதித்து, அவர் ஏறிய வெள்ளை யானைக்கு முன் அவரைச் சேவித்துக்கொண்டு வந்தேன். தேவரீர்பொழிகின்ற பெருங் கருணை வெள்ளம் அடியேனை இங்கு கொண்டு வந்து ஒதுக்கியதால் திருமுன் வரப் பெற்றேன்; மலைமகள் நாயக! இனி ஒரு விண்ணப்பம் உண்டு; மாலயனாதி வானவர்களாலும், மாதவர்களாலும் மறைகளாலும் துதிக்கப்படுவதற்கு அரிய பெருமையுடைய தேவரீர் மீது அன்பினாலே தேவரீரது திருவருள் துணை கொண்டு திருவுலாப் பாடினேன். அதனைத் தேவரீர் திருச்செவி சாத்தியருள வேண்டும்'' என்று விண்ணப்பம் செய்தார். அப்பொழுது சிவபெருமான், ''சேரனே அதனைச் சொல்லு'' என்று திருவாய் மலர்ந்தனர். சேரமான் பெருமான் நாயனார் உடனே திருக்கைலாய ஞான உலாவை ஆசு கவியாகப் பாடிப் பெருமானைக் கேட்பித்தார். அரனார் மகிழ்ந்து, அருள் செய்து, ''நம்முடைய கணங்களுக்கு நாதனாய் இரு'' என்று அருள் புரிந்தார். சேரமான் பெருமான் நாயனார் சிவகண நாதராகிச் சிவமூர்த்தியைச் சேவிப்பாராயினார். அவர் அருளிச் செய்த ஞான உலாவை அங்கு அன்று கேட்ட மகா சாத்தர், தமிழ் நாட்டிலே உள்ள திருப்பிடவூரிலே அதனைக் கொணர்ந்து வெளியிட்டு, உலகில் விளங்க நாட்டியருளினார்.

✖ சிதெ. வைரவன், சென்னை-17

கே: காந்திஜியையே பிறக்கச் செய்தது இந்த நாடு. அவருடைய வரலாற்றை நம்மால் நன்றாகப் படம் எடுக்கமுடியாதா? அட்டன் பரோவிற்கும் பரிசிநீர்களே. காந்திஜி இறுதி ஊர்வலத்தை அவர் படம் எடுத்த லட்சணத்தைக் கேள்விப் படவில்லையா?

ப: இறுதி ஊர்வலத்துக்குப் போனவர்கள் காதல் காட்சி ஷூட்டிங் பார்க்கப் போன வர்கள் மாதிரி நடந்து கொண்டார்கள். அட்டன் பரோவின் மீது குற்றம் சொல்லக் கூடாது. படம் வெளிவரும் வரையில் சும்மா இருப்பதுதான் சரி. (காந்தி இந்த நாட்டில் பிறந்தார் என்பதால் அவரைப் பற்றிய படம் எடுக்க நமக்கு மட்டும்தான் தகுதி இருக்கிறது என்பது சரியல்ல)

✖ சந்திரபோஸ், துறையூர்

கே: உங்கள் பல் செட்டின் விலை என்ன? (புத்தி சாலித்தனமாய்ப் பதில் கூறுவதாய் எண்ணி, 'ஏனய்யா உனக்கும் வேண்டுமா?' என்று பதில் சொல்லாதீர்)

ப: சரி. அப்படிப் பதில் சொல்லவில்லை. இந்தப் பதில் எப்படி என்றுசொல்லுங்கள்; ''ஓஹோ... நீங்கள் புது பல் செட் வாங்கியிருக்கிறீர்களா? அதிக விலை கொடுத்து வாங்கி விட்டோமோ என்று பார்க்க நாலு பேரைக் கேட்கிறீர்கள். அப்படித்தானே?''




தாவது வயதுக்குள் கிட்டத்தட்ட முழுச் செவிடாகி விட்டார். இருந்தும் பல அற்புதமான சாதனைகளை இசையில் செய்தார். அவர் காலமாகி 150 வருஷங்களுக்கு மேலாகியும் மேற்கத்திய இசை உலகில் பீத்தோவனுக்கு நிலையான இடம் இருக்கிறது.

# கக்க பதில்கள்

✖ கோ. கணேசன், நாகூசிக்கோட்டை

கே: அம்புலியாய்ப்பார்த்த நிலா என்ற சினிமாப் பாடலைப்பற்றி பதில் சொல்லியிருந்ததைப்பார்த்தேன். பலவற்றில் கவிதைகள் உண்டு என்பதை ஒத்துக்கொள்வீர்களா?

ப: உங்களை மாதிரி பலர் கேட்டிருக்கிறார்கள். நான் பொதுவாகச் சொன்ன கருத்து அது. சினிமாப் பாடல்களிலும் அற்புதமான கவிதை நயங்கள் கொண்ட பாடல்களுண்டு. சில அபத்தமான சினிமாப் பாடல்களும் உண்டு.

✖ மணிமொழி, பல்லடம்

கே: எனக்குக் காது சரியாகக் கேட்பதில்லை. இதனால் எனக்குத் தாழ்வு மனப்பான்மை ஏற்படுகிறதே?

ப: உடற்குறை பல சமயம் உள்ளத்தைப் பாதிக்கிறது. உடற்குறை உள்ளவர்கள் பலர் செய்துள்ள சாதனைகளைப் பற்றிப் படித்து ஊக்கம் பெறுங்கள். ஜெர்மனிய இசை மேதை பீத்தோவன் முப்ப




✖ வே. நாராயணபாபு, சைடாபாட் (ஆந்திரா)

கே: நல்ல உள்ளம் படைத்த சந்திரன் என்னும் லாரிடிரைவர் வாணியம்பாடி விபத்தின் போது இரண்டு குழந்தைகளைக் காப்பாற்றிவிட்டு மூன்றாவதாக ஒருவரைக் காப்பாற்றப் போனபோது அவரது வலது கை சேதமானது. உபகார குணமுள்ளவருக்கு ஏன் இப்படி ஒரு ஆபத்தை ஏற்படச் செய்தார் கடவுள்?

ப: கடவுளின் செயல்களைப் புரிந்துகொள்ள, அறிஞர்களும் பக்திமான்களும் பலநூறு வருடங்களாக முயன்று வந்தும் முடியவில்லை. அவனுடைய காரியங்கள் யாவற்றுக்கும் காரணங்கள் உண்டு. அவை என்ன என்பதுதான் நமக்குத் தெரிவதில்லை. உயிரிழக்காமல் கையை மட்டும் இழந்ததே ஆண்டவனின் கருணையால் தான் என்று எண்ணித் தேற்றிக் கொள்ள வேண்டும்.

✖ ஆர். அரிகோபி, குடியாத்தம்

கே: ஒருவனைத் திடீரெனப் பணக்காரனாக ஆக்கினால் அவன் நிலை எப்படி இருக்கும்?

ப: என்னை ஆக்கிப் பாருங்கள். அப்புறம், நிலை எப்படி இருக்கிறது என்று சொல்லுகிறேன். ஊகம் எல்லாம் எனக்குப் பிடிக்காது.

✖ விஜயா சீனிவாசன், கைலாசபுரம்

கே: ஒரு பொய் எப்போது மதிப்பு பெறுகிறது?

ப: அறிவிலும் திறமையிலும் கடுகுவிற்கு நிகர் இல்லை என்னும்போது, அது மதிப்புப் பெறுகிறது — கடுகுவிடம்!

பரிசு: மணிமொழி, பல்லடம்.



# அவன் ஊட்டிய ஆவேசம்!

இந்தியாவை ஆள்வதற்கென்றே ஆண்டவன் பிரிட்டிஷாரை இந்த நாட்டுக்கு அனுப்பி வைத்ததாக எண்ணி வெள்ளையர் இறுமாந்திருந்தனர்.

இந்திய சமுதாயத்தின் மீது ஆங்கிலக் கல்வி முறையைத் திணித்த மெக்காலே என்பவர் இந்தியாவின் கலாசாரத்தைப் பழித்தும் இழித்தும் நூல் எழுதினார்.

காதரின் மேயோ என்ற ஒரு வெள்ளைக்காரி இந்துக்களின் பழக்க வழக்கங்களைப் பழித்து நூல் எழுதினார்.

இந்திய வைஸ்ராய்களிலே தனக்கென ஒரு வரலாற்றைப் படைத்துவிட்ட லார்டு கர்ஸான் என்பவரும் இந்திய சட்ட சபையிலேயே "பாரத மக்களெல்லாம்பொய்யர்கள்; நாகரிகமற்றவர்கள்" என்று ஆணவத்துடன் பேசினார்.

இந்தியாவிலே உயர் பதவிகளெல்லாம், ஆளும் சாதியினரான ஆங்கிலேயருக்கே உரிமையாக்கப்பட்டிருந்தன.

ரயிலிலே முதல் வகுப்புப் பெட்டியில் ஒரு வெள்ளையர் ஏறிவிட்டால் கறுப்பர் எனப்பட்ட இந்தியர் எவரும் — அவர் எவ்வளவு அந்தஸ்துடையவராயினும் — அந்தப் பெட்டியில் ஏற முடியாது.

ஒரு வெள்ளையர் கிரிமினல் குற்றம் செய்துவிட்டால் அதற்காக அவரை இந்திய அதிகாரி எவரும் கைது செய்ய முடியாது. வெள்ளை அதிகாரிதான் கைது செய்ய வேண்டும். வெள்ளையராக உள்ள நீதிபதிதான் அவர் வழக்கை விசாரிக்க முடியும். ஏனெனில், அவர் கிரிமினல் குற்றவாளியானாலும் ஆளும் சாதியினராம்!

இந்தக் கொடுமைகள் எல்லாம் படித்தவர்களாயிருந்த இந்தியர்களுக்குத் தெரியும். ஆயினும் அவர்கள் எல்லாம் இதனை எதிர்க்கத் துணிவற்றவராக இருந்தனர். இந்தியரைப் பற்றி வெள்ளையர்கள் இழிவாகப் பேசியதும் எழுதியதும் அவர்கள் தாய் மொழியான ஆங்கிலத்தில்தான். அதனால் இந்தியாவில் உள்ள சாதாரண மக்கள் அதனை அறிந்து கொள்ள முடியாத நிலை இருந்தது. ஆகவே ஆங்கிலேயர்கள் இந்தியர்களைப் பற்றிக் கொண்டிருந்த எண்ணங்களைச் சமுதாயத்தின் அடித்தளத்திலிருந்த சாதாரண மக்களின் கவனத்துக்குக் கொண்டு செல்லப் பாரதியார் முயன்றார். அவர்களுக்குத் தெரிந்துவிட்டால் "எடுத்தெறிய வேணும் இந்த அடிமை 'வாழ்வை என்று அடித்துரைத்து ஆவேசம் கொள்வார்கள்" என்று அந்த மகா கவி நம்பினார்.

அதற்கென "தொண்டு செய்யும் அடிமை" என்னும் தலைப்பிட்டு ஒரு பாடலையே படைத்தார் ஆம். ஆங்கிலேயன் இந்தியனைப் பார்த்துப் பேசுவது போல.

'நந்தனார் சரித்திரக் கீர்த்தனை'யிலே, பிறப்பாலும், செல்வத்தாலும் உயர்வு மனப்பான்மை கொண்ட அந்தண மிராசுதார், தனக்கு அடிமைப்பட்ட நந்தனைப் பார்த்து, "மாடு தின்னும் புலையா!—உனக்கு மார்கழித் திருநாளா" என்று கேட்பதாக, கோபால கிருஷ்ண பாரதியார் பாடியுள்ளார். அந்தப் பாட்டின் வர்ண மெட்டையே பயன்படுத்தி,

"தொண்டு செய்யும் அடிமை — உனக்குச்
சுதந்திர நினைவோடா?
பண்டு கண்டதுண்டோ — அதற்குப்
பாத்திரமாவாயோ?"

என்று பாட்டைத் தொடங்குகிறார் பாரதி.

"ஜாதிச் சண்டை போச்சோ — உங்கள்
சமயச் சண்டை போச்சோ?
நீதி சொல்ல வந்தாய் — கண்முன்னே
நிற்கொணாது போடா!"
கப்பலேறுவாயோ — அடிமை!
கடலைத் தாண்டுவாயோ?
குப்பை விரும்பும் நாய்க்கே — அடிமை!
கொற்றத் தவிசு முண்டோ?"

என்பது அடிமை இந்தியனைப் பார்த்து ஆங்கிலேயன் எழுப்பும் வினா. இதிலே இந்தியனை "நாய்" எனக் கூறியதாக பாரதியார் பாடுவது, அவராகச் சொல்லும் கற்பனை வாதமல்ல. ஆங்கிலேயர் இந்தியர்களை நாய்க்கு நிகராகத்தான் கருதினார்கள், அந்நாளிலே!

ஆகஸ்டு இயக்கத்தின்போது தேச பக்தர்களையெல்லாம் வலுவில் பிடித்துச் சிறையில் அடைத்துவிட்டு, அப்போதைய இந்தியா மந்திரி அமெரி என்பார், "இந்திய நாய்கள் எவ்வளவுதான் குரைத்தாலும் பிரிட்டிஷ் அரசு அதன் போக்கிலேதான் போய்க் கொண்டு இருக்கும்' என்று பிரிட்டிஷ் பார்லிமெண்டிலே பேசினார்.

"நாடு காப்பதற்கே — உனக்கு
ஞானம் சிறிதுமுண்டோ?
வீடு காக்கப் போடா! — அடிமை!
வேலை செய்யப் போடா!"

எத்தனை எத்தனையோ சாம்ராஜ்யங்களைப் படைத்து, சக்கரவர்த்திகளைக் கண்ட இந்திய சமுதாயத்தைப்பார்த்து "நாடு காப்பதற்கே உனக்கு ஞானம் சிறிதுமுண்டோ?" என்று கேட்கிறான் வெள்ளையன்.

இந்தப் பாடலை 1907ல் புனைந்துள்ளார் பாரதியார். அந்நாளிலே, இந்தியாவுக்கு எந்த விதமான சீர்திருத்தத்தையும் ஆங்கிலேயர் வழங்கவில்லை. வழங்குகின்ற உத்தேசம் கூட அவர்களுக்கு இருந்ததில்லை. இந்த உண்மையை உணர்த்தத்தான், 'சுதந்திரம் உனக்கில்லை மறந்திடடா!' என்று வெள்ளையன் சொல்வதாகப் பாரதியார் கூறிப் பாடலை முடிக்கிறார்.

ம.பொ.சி

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543) Editor : K. Rajendran

# தகடுகள் டிஸ்க்ராலாக இருந்தால் உங்களால் சேதம் பண்ண முடியாது



பெரும் வாரியான முக்கிய தொழில் சாலைகளுக்கான இரும்பு, நிலக்கரி மற்றும் பிரத்யேக தாதுப் பொருள்களை பெருமளவு கையாளுவதற்கு டிஸ்க்ரால் தகடுகள் மிகவும் உகந்ததாக இருக்கின்றன. டிஸ்க்ரால் தகடுகளின் பயனை எரிக்கலவாய்—கூடைகள், தடுப்புத் தகடுகள், மதகுக்கதவுகள், வேகமாக அசைகின்ற தகடுகள், தாலிய இயந்திரங்களில் உபயோகிக்கும் பிரத்யேக தகடுகள், சுத்தியல் மில்கள் போன்ற இடங்களில் நன்கு காணலாம் .... முரட்டுத்தனமான உபயோகிக்கும் இடங்களிலும், தேய்வின் பயங்கரம் அதிகமாக உள்ள இடங்களிலும் டிஸ்க்ரால் மிகவும் பயன் படுகிறது.

பிரத்யேக தேய்வுத்தடுப்பின் திறத்தினாலும், புத்திசாலித்தனமான உலோகக்கலவையாலும் செய்யப்பட்டதாலும், டிஸ்க்ரால் தகடுகள், கீறல்களாலும், அரைத்தூள்களாலும், அல்லது வெட்டுதலாலும் ஏற்படுகின்ற சேதத்தைத் தடுக்கின்றன. இதன் பயன், அடிக்கடி இயந்திரங்களின் பாகங்களை மாற்றும் நிலைமையையும், அருவருப்பான நேரச்செலவுகளையும், பணச்செலவுகளையும் தடுக்கிறது. எல்லாவற்றைக் காட்டிலும் டிஸ்க்ரால் கருவிகளை உருவாக்குவதில் எளிமையையும் உறுதியையும் இணைக்கிறது. தகடுகளின் இணைப்பு, இயந்திர வேலைப்பாடு, வெட்டுதல், துளையிடுதல் மற்றும் வளைதல், எல்லாம் எளிது- உங்களுக்கு வேண்டுமா ?

**மேலும் விவரங்களுக்கு கீழ்க்கண்டவர்களுக்கு எழுதவும்:**

- **டைரக்டர் ஆப் மார்க்கெட்டிங்**
  **தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி லிமிடெட்**
  **48, சௌரங்கி ரோடு, கல்கத்தா-700 071**
- **ஜாயிண்ட் சீப் ஆப் புரொடக்ஷன் கண்ட்ரோல்**
  **தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி லிமிடெட்**
  **ஜம்ஷெட்பூர் 831 001**
- ***சீனியர் அப்ளிகேஷன் இன்ஜினியர்***
  ***தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி லிமிடெட்***
  ***நியூ இந்தியா அஸ்யூரன்ஸ் பில்டிங்***
  ***87, மஹாத்மா காந்தி ரோடு***
  ***பம்பாய் 400 023***
- ***சீனியர் அப்ளிகேஷன் இன்ஜினியர்***
  ***தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி லிமிடெட்***
  ***பேங்க் ஆப் பரோடா பில்டிங்***
  ***16, பார்லிமெண்ட் ஸ்ட்ரீட்***
  ***புது டெல்லி 110 001***
- ***சீனியர் அப்ளிகேஷன் இன்ஜினியர்***
  ***தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி லிமிடெட்***
  ***20ஜெ, மஹாத்மா காந்தி ரோடு***
  ***பெங்களூர் 560 001***
- ***சீனியர் அப்ளிகேஷன் இன்ஜினியர்***
  ***தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி லிமிடெட்***
  ***பார்க் சென்டர், 24 பார்க் ஸ்ட்ரீட்***
  ***கல்கத்தா 700 016***
- *அப்ளிகேஷன் இன்ஜினியர்*
  *தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி லிமிடெட், இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்*
  *31 நார்த் பீச் ரோடு [மூன்றாவது மாடி]*
  *மதராஸ் 600 001*




**டாடா ஸ்டீல்**

TIS 3563/86

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

## டிப்பி டி, டிப்பி டோய், டிப்பி டம்-டம்
## டிப்பிஸ் ஸ்க்வாஷுகள்
## தித்திக்கும் கனியமுதம்!

ஆவல் மீறுமே நாவில்
நீரூறுமே—சாறூறிய
கனிகளின் தேனூறு...
கிளையிற் பழுத்துக்
கிளிகொஞ்சிய சுளையமுதம்
கூவவைக்கும்: "பாரப்பா
பழ நியப்பா, ஜிலுஜிலு
சாறப்பா, தாகம் தீரப்பா"
சும்மாவா குட்டிவீரன்
டிப்பி, ஞானப் பழம்!

கொஞ்சுமழகு லேபல்
தரித்த டிப்பிஸ் லெமன்,
ஆரஞ்சு, மேங்கோ
ஸ்க்வாஷ்கள், லெமன்
பார்லி வாட்டர், லைம்
கார்டியல், பைனப்பிள் கிரஷ்,
இன்சுவை சர்பத்துக்கான
ஸிரப் வகைகள்.

உறிஞ்சுவீர் பழக் களஞ்சியம் டிப்பிஸ்.




# ஒப்பில்லை இது டிப்பிஸ் டோய்!